# குறள்

## மூலமும உரையும்.



இதிலே

புறத்துபபாலும் பொருட்பாலும்

அடங்கியிருக்கிறது.

TRANQUEBAR,

PRINTED BY E. F. HOBUSCH AT THE E. L. M. PRESS.

1873.

[illegible]

# குறள்

# அறத்துப்பால்

KURAL I.

## 1. கடவுள் வாழ்த்து

1. அகரமுதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

க

முதல - முதன்மையாகவுடையன. முதற்றே - முதன்மையாகவுடையது. (ஏ, தேற்றேகாரம்.)

எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதன்மையாகவுடையன. உலகம் ஆதிபகவனைமுதன்மையாகவுடையது.

2. கற்றதனாலாய பயனென் கொல்வாலறிவ
னற்றாடொழா அரெனின்.

உ

ஆய - உண்டான. என் - என்ன. (கொல், அசைநிலை.)

வால் - மெய். எனின் - ஆகில். (னற்றாடொழா அர்: ன், நல், தாள், தொழார். ஆஅர், உயிரளபெடை.)

மெய்யறிவையுடையவனின் பாதத்தை வணங்காவிட்டால் படிப்பினால் உண்டாகும் பிரயோசனமென்ன.

3. மலர்மிசையேகினான் மாணடிசேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ்வார்.

மிசை - மேல். ஏகினான் - நடந்தவன். மாண்மை. நீடு - நெடுங்காலம்.

பெரு

மலர்மேல் நடந்தவனின் பெருமை பொருந்திய பாதத்தைச் சேர்ந்தவர்கள் நிலத்திற்குமேல் நெடுங்காலம் வாழ்வார்கள்.

4. வேண்டுதல் வேண்டாமை யிலானடிசேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பையில.

இலான் - இல்லாதவன். யாண்டும் - எக்காலத்திலும்.
இடும்பை - துன்பம். இல - இல்லை.
விரும்புதல் விரும்பாமை யில்லாதவனின் பாதத்தைச் சேர்ந்தார்க்கு எக்காலத்திலுந் துன்பம் இல்லை.

5. இருள்சேரிருவினையுஞ் சேராவிறைவன்
பொருள் சேர்புகழ்புரிந்தார்மாட்டு.

சேரா - சேராது. இறைவன் - கடவுள். புரிந்தார் விரும்பினவர். மாட்டு - இடத்தில்.
கடவுளின் பொருள் சேர்ந்த புகழை விரும்பினவரிடத்தில் இருட்டோடு கலந்த இருவினைகளுஞ் சேராது.



6. பொறிவாயிலைந்தவித்தான் பொய்தீரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ்வார்.

வாயில் - வழிகள். அவித்தான் - அவித்தவன்.
அற்ற. ஒழுக்கநெறி - நல்லவழி.

௬

தீர்-

பொறிகள் வழியாயுள்ளடாகும் ஐந்து ஆசைகளை அவித்தவனின் பொய்யற்ற ஒழுக்கவழியில் நின்றவர்கள் நெடுங்காலம் வாழ்வார்கள்.

7.

தனக்குவமையில்லா தானருள் சேர்ந்தார்க்கல்லான்
மனக்கவலைமாற்றலரிது. எ

உவமை - நிகர். அல்லான் - அல்லாமல்.

தனக்கு நிகரற்றவனின் பாதத்தைச் சேர்ந்தவர்க்கு அல்லாமல் (மற்றவர்க்கு) மனக்கவலையை மாற்றுதல் அரிது.

8.

அறவாழியந்தணன்றாள் சேர்ந்தார்க்கல்லாற்
பிறவாழி நீந்தலரிது. அ

ஆழி - கடல். அந்தணன் - கிருபையுள்ளவன். அல்லால் - அல்லாமல்.

தருமக்கடலாகிய அந்தணனின் பாதத்தைச்சேர்ந்தவர்க்கு அல்லாமல் (மற்றவர்க்கு) வேறுகடலை நீந்துதல் அரிது.

9.

கோளில்பொறியிற் குண மிலவே எண்குணத்தான்
றாளை வணங்காத்தலை. ௯

கோளில் - கொள்ளுதல்இல்லாத. இலவே - இல்லையே.

எண்குணத்தானின் பாதத்தைவணங்காத தலைகள் கொள்ளுதல் இல்லாத பொறிகளைப்போல் பிரயோசனமில்லாதவைகளாகும.

10. பிறவிப்பெருங்கடனீந்துவர் நீந்தா
ரிறைவனடி சேராதார்.

ம

பிறவி - பிறப்பு.

பிறப்பாகிய பெரிய கடலை நீந்துவார்கள்; கடவுளின் தாளைச் சேராதவர்கள் நீந்தார்கள்.

யா



அறத்துப்பால்.

## 2. வான்சிறப்பு.

11. வானின்றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற்பாற்று.

வானின்று -
அறியப்படுந்

மழை இடைவிடாமல். உணரற்பாற்று தன்மையையுடையது. (பா்ற்று,பால்து.)

மழை இடைவிடாமல் நிற்க. உலகம் விர்த்தியாகி வருவதினால் அது அமிர்தமென்று அறியப்படுந் தன்மையுடையது.

12. துப்பார்க்குத்துப்பாய துப்பாக்கித்துப்பார்க்குத் துப்பாயதூஉமழை .

உ

துப்பார்க்கு - உண்பவர்க்கு. துப்பாய - (துப்பாயதூஉம், துப்பாயதும்).

உணவாகிய

உண்பவர்க்கு போசனமாகிய உணவுகளை உண்டாக்கி உண்பார்க்குத்தானும் உணவாய் நிற்பது மழை.

1 3. விண்ணின்று பொய்ப்பின் வி ரி நீர் வியனுலகத்

துண்ணின்றுடற்றும் பசி.

ந

பொய்ப்பின் - பொய்த்துப்போனால். விரி - பெரிய வியன் - விசாலமான. உடற்றும் - வருத்தும். (துண்ணின்று: து, உள், நின்று.)

விண்ணின்றுமழை பொய்க்குமானால் விரிந்த விசாலமான உலகத்துள் பசி நின்று வருத்தும்.

நீரையுடைய

14. ஏரினுமுழா அருமுவர் புயலென்னும் வாரிவளங் குன்றிக் கால்.

ச

(உழாஅர், உழார்). புயல் - மேகம்.
ளம். குன்றிக்கால் - குறைந்தால்.

வாரி - வெள்

புயல் என்னும் வாரிவளங் குறைந்தால் உழவர் ஏரினுல் உழார்.

15.

கெடுப்பதூஉங்கெட்டார்க்குச்சார்வாய்மற்றுங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை. ரு

சார்வாய் - துணையாய். (மற்றுங்கு, அசை நிலை.)

கெடுப்பதுங் கெட்டவர்க்குச் சார்பாகி அவர்களை எடுத்து விடுவதும் மழை.

அறத்துப்பால்.

16. விசும்பிறுளி வீழினல்லான் மற்றுங்கே
பசும் புற்றலைகாண்பரிது.

சுு

விசும்பின் - மேகத்திலிருந்து. வீழினல்லான் - விழா

விட்டால்.

மேகத்திலிருந்து மழை விழாதிருந்தால் பசும்புல்லின்

தலையையுங் காணபதரிது.

17 நெடுங்கடலுந்தனணீர்மைகுன்றுந்தடிந்தெழிலி
தானல்காதாகிவிடின்.

எ

குன்றும்
மேகம்.

- குறையும். தடிந்து - குறைத்து. எழிலி -
நல்காதாகிவிடின் - பெய்யாவிட்டால்.

மேகநதடித்துப் பொழியாவிட்டால் நெடுங்கடலுந் தன் இயல்பில் குறையும்.

18. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.

அ

பூசனை - பூசை. வறக்கும் - பெய்யும்.
ஏல் - இல்லாவிட்டால. ஈண்டு - இங்கே.

மழை பெய்யாவிட்டால் வானோர்க்கும் இவ்வுலகில் சிறப்போடு பூசை நடவாது.

19. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்காதெனின்.

க

தங்கா - நிலையாது.

மழைபெய்யாவிட்டால் இந்த விரிந்த உலகத்தில் தவம் இரண்டுந் தங்கியிருக்காது.

தானம் 20.

நீரின்றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின்றமையாதொழுக்கு. ய

இன்று - இல்லாமல். ஒழுக்கு - ஒழுக்கம்.

நீரில்லாமல் யார்யார்க்கும் உலகியல் அமையாது;
மும் மழையின்றி அமையாது.

ஒழுக்க



அறத்துப்பால்.

## 3. நீத்தார் பெருமை.

21. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

க

நீத்தார் - துறந்தார். பனுவல் - நூல்.
துணிவு - நிச்சயம்.

நூல்களின் நிச்சயம் ஒழுக்கத்து நீத்தவரின்
மேலானதென்று சொல்லும்.

22.

பெருமையை

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று. உ

துணைக்கூறின் - அளவு சொன்னால். அற்று - போலும்.

துறந்தவர் பெருமையின் அளவுசொன்னால் பூமியில்
தவரை எண்ணிக்கொண்டது போலாம்.

இறை 23. இருமைவகை தெரிந்தீண்டறம்பூண்டார்
பெருமை பிறங்கிற்றுலகு.

ஈண்டு - இவ்விடத்தில். பிறங்கிற்று - உயர்ந்தது.

இருமையின் வகைகளை அறிந்து இவ்வுலகில் மேற்கொண்டவர் பெருமை உயர்ந்தது.

அறவறத்தை

24. உரனென்னும்
தோட்டியானோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர்வித்து

உரன் - அறிவு. தோட்டியால் - அங்குசத்தினுல்.
வரன் - மோட்சம். வைப்பு - நிலம்.

அறிவு என்னுந்தோட்டியால் ஐம்பொறிகளையுங் காப்பவன் மோட்சம் என்னும் நிலத்துக்கு ஓர் வித்து ஆவான்.

25. ஐந்த வித்தானாற்றலகல் விசும்புளார் கோமா
னிந்திரனே சாலுங்கரி.

ஆற்றல் - வல்லமை. சாலுங்கரி - போதுமானசாட்சி.

ஐந்தாசைகளையும் அவித்தவனின் வல்லமைக்கு

அகன்ற வானத்தில் உள்ளவர்களுக்கு எசமானுகிய போதமான சாட்சி.

தேவேந்திரன் அறத்துப்பால். எ

26. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலாதார்.

செய்கலாதார் - செய்யமாட்டாதவர்.

செய்வதற்கு அருமையானவைகளைச் செய்பவர் பெரியோர், சிறியர் செய்வதற்கு அரியவைகளைச் செய்யாதவர்.

27.

சுவையொளி யூறோசை நாற்றமென்றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு. எ

கட்டு (கண், டு) - இடத்தில்.

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்கிற ஐந்தின் வகையைத் தெரிந்துகொள்பவனிடத்தில் உலகமுண்டு.

வகை

28. நிறைமொழிமாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டிவிடும்.

நிறை - நிறைந்த. மறைமொழி - மந்திரம்.

நிறைந்த மொழியையுடைய மனிதரின் பெருமையை அவர்கள் மந்திரம் காட்டிவிடும்.

29. குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்தலரிது.

கூ

குன்று - மலை. வெகுளி - கோபம்.

குணமென்னும் மலையில் ஏறி நின்றவரின்
கணப்பொழுதாகிலுங் காத்தல் அருமை.

கோபத்தைக்

30.

அந்தணரென் போரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுகலான்.

செந்தண்மை - செவ்வையான அருள்.
பூண்டு - வைத்து. ஒழுகலான் - நடத்தலால்.

எல்லா உயிர்களிடத்திலுஞ் செவ்வையான அருள்வைத்து
கிறதினால் அந்தணரென்பவர் அறமுள்ளவர்களாம்.

அறத்துப்பால.

## 4. அறன் வலியுறுத்தல.

31. சிறப்பீனுஞ் செல்வமுமீனுமறத்தினூஉங்
காக்கமெவனோ வுயிர்க்கு.

ஈனும் - கொடுக்கும். ஊங்கு - மேலான.
செல்வம். எவனோ - என்ன.

ஆக்கம்

சிறப்பையுங் கொடுக்கும்; செல்வத்தையுங் கொடுக்கும்;
உயிர்க்கு அறத்திலும் மேலான செல்வம் என்ன.

32. அறத்தினூ உங்காக்கமுமில்லையதனை
மறத்தலினூ உங்கில்லைகேடு.

உ

அறத்திற்கு மேற்பட்ட செல்வமுமில்லை.
தனுக்கு மேற்பட்ட கெடுதியுமில்லை.

அதைமறத்

33. ஒல்லும் வகையாலறவினையோவாதே
செல்லும் வாயெல்லாஞ் செயல்.

ஒல்லும்-கூடும். ஓவாதே-ஒழியாமல். செயல்-
செய்க.

செல்லும்

இடங்களிலெல்லாங்கூடியமாத்திரதர்மச்செய் கையை
ஒழியாமல் செய்க.

34. மனத்துக்கண் மாசிலனாதலனைத்தற
னாகுல நீரபிற.

இலனாதல் - இல்லாதவனாகுதல். ஆகுலநீர -

ஆரவா

ரத்தன்மையையுடையவை.

மனசில் குற்றமில்லாதவனாகுதல் அவ்வளவுதான் அறம். மற்றவை ஆரவாரத்தன்மையை உடையன.

35. அழுக்காறவாவெகுளியின்னாச்சொன்னான்கு
மிழுக்காவியன்றதறம்.

ரு

அழுக்காறு - பொறாமை. அவா - ஆசை.
கோபம். இன்னாச்சொல் - கடுஞ்சொல்.
வழுவாமல். இயன்றது - நடந்தது.

வெகுளி
இழுக்கா

பொறாமை, ஆசை, கோபம், கடுஞ்சொல் ஆகிய
யும் வழுவாமல் நடந்ததே அறம்.

நான்கை

அறத்துப்பால்.

36. அன்றறிவாமென்னாதறஞ் செய்க மறறது
பொன்றுங்காற் பொன்றாத்துணை.

அ

பொன்றுங்கால் - சாகும்போது.
பொன்றா - அழியாதது.

அன்று அறிவோமென்னாது அறஞ்செய்க.
கும்போது அழியாததுணையாம்.

அது இறக்

37. அறத்தாறிதுவென வேண்டா

சிவிகை

பொறுத்தானோ டூர்ந்தானிடை .

எ

சிவிகை - பல்லக்கு. பொறுத்தான் -
ஊர்ந்தான் - ஏறியிருக்கிறவன்.

தூக்கினவன்.

தருமத்தின் பிரயோசனம் இதுவென்று
சொல்லவேண்டுவதில்லை. பல்லக்கைச் சுமக்கிறவனையும்
வனையும் பார்த்தறிக.

அதிலேறியிருக்கிற 38. வீழ்நாள்படாஅமை

நன்றாற்றினஃதொருவன்

வாழ்நாள் வழியடைக்குங்கல்.

அ

வீழ் - ஒழியும். ஆற்றின் - செய்தால்.

கழியும் நாள்உண்டாகாமல் நன்மைசெய்தால் அது
வாழும் நாளின் வழியை அடைக்குங்கல்லாகும்.

39. அறத்தான்வருவதே யின்பமற்றெல்லாம்
புறத்த புகழுமில.

கூ

புறத்த - புறம்பானவைகள். இல - அல்ல.

தர்மத்தால் வருவதுதான் இன்பம்;
புறம்பானவைகளும் புகழற்றவையுமாம்.

மற்றவையெல்லாம்

0. செயற்பாலதோரு மறனே யொருவற்
குயற்பாலதோரும்பழி.

ம

பாலது
(ஒரும்,

- தன்மையையுடையது. உயல் - ஒழியல்.
அசைநிலை.)

செய்யும் பாலது தர்மம். ஒழிக்கும் பாலது பாவம்.



அறத்துபபால.

## 5. இலவாழகககை.

41. இல்வாழ்வானென்பானியல்புடைய
நல்லாற்றினின்றதுணை.

மூவர்க்கும

இயல்பு - நிலைமை. மூவர் - பிரமசாரி,
தன், சந்நியாசி.

வானபிரத்

இல்லறத்தோடு கூடிவாழ்பவன் நிலைமைகளையுடைய
ருக்கும் நல்லவழியில் நிலைத்திருக்குந் துணையாவான்.

மூவ 42. துறந்தார்க்குந் துவ்வாதவர்க்கு
மில்வாழ்வானென்பான்றுணை.

மிறந்தார்க்கு

உ

துவ்வாதவர் - ஏழைகள்.

அறந்தவர்களுக்கும் ஏழைகளுக்கும் இல்லறத்தான் துணை.

இறந்தவர்களுக்கும் **43.**

தென்புலத்தார்தெய்வம்விருந்தொக்கறுமென்றுங் கைம்புலத்தாறோம்பறலே.

தென்புலத்தார் - பிதிர் தேவதைகள். ஒக்கல் - சுற்றத்தார். புலத்து - இடத்தில்.

பிதிர்கள், தெய்வம், விருந்தினர், சுற்றத்தார், தான் என்ற ஐந்திடத்திலுஞ் செய்யவேண்டிய தர்மத்தைப் யாதுகாப்பது சிறந்ததாம்.

**44.**

பழியஞ்சிப்பாத்தூணுடைத்தாயின் வாழ்க்கை வழியெஞ்சலெஞ்ஞான்றுமில்.

பாத்து - பகுத்து. எஞ்சல் - குறைதல்.
எஞ்ஞான்றும் - எப்போதும்.

குற்றத்துக்கு அஞ்சிப் பகுத்து உண்பதை இல்வாழ்க்கையுடையதானல் சந்ததி எப்போதுங் குறையாது.

**45.** அன்புமறனு முடைத்தாயினில் வாழ்க்கை பண்பும் பயனுமது .

பண்பு - குணம்,

இல் வாழ்க்கை அன்பையும் அறத்தையுமுடையதானல் அது தகுதியும் பயனுமாம்.

அறதருபபால.

46. அறத்தாற்றினில் வாழ்க்கையாற்றிற் போஒய்ப்பெறுவதெவன்.

புறத்தாற்றிற்

சு

ஆற்றின் - வழியில். ஆற்றில் - செலுத்தினால். (போஒய், போய்).

ஒருவன் இல்வாழ்க்கையைத் தர்மவழியில் செலுத்தினால் அவன் அதற்குப்புறம்பான வழியில்போய்ப்பெறுவது என்ன.

47

இயல்பினானில் வாழ்க்கை வாழ்பவனென்பான் முயல் வாருளெல்லாந் தலை. எ

முயலவார் - தவஞ்செய்பவர்.

இல்வாழ்க்கைக்குரிய தன்மையோடு வாழுகிறவன் செய்வாரெல்லாரையும் பார்க்க உயர்ந்தவன்.

தவஞ் 48.

ஆற்றினொழுக்கி யறனிழுக்காவில் வாழக்கை நோற்பாரினோன்மையுடைத்து. அ

ஒழுக்கி - நடத்தி. இழுககா - தவறாத. தவசிகள். நோன்மை - பெருமை.

நோற்பார்

தவஞ் செய்வாரை அவர்கள் வழியில் நடத்தித்

தர்மத்தினினறுந் தவறாத இல்வாழ்க்கை தவசிகளிலும் பெருமையுடையது.

49. அறனெனப்பட்டதே யில்வாழ்க்கையஃதும்
பிறன் பழிப்பதில்லாயினன்று.

சு

இல்லாயின் – இல்லாவிட்டால்.

அறனென்னப்பட்டது இல்வாழ்க்கை. அதுவும் பிறரால் பழிக்கப்படாதிருக்குமாகில் நன்மையாம்.

(தவமும்) 50. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்
தெய்வத்துள் வைக்கப்படும்.

வானுறையுந்
ம

வாழ்வாங்கு – வாழவேண்டியபடி. உறையும் வாசம்பண்ணும்.

பூமியில் இல்லறத்தன்மையோடு வாழுகிறவன்

வானத்து
நுக்குந் தேவர்களுக்குள் வைக்கப்படுவான்.



அறத்துப்பால்.

## 6. வாழ்க்கைத் துணை நலம். 51.

மனைத்தக்க மாண்புடையளாகித்தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

மாண்பு – சிறப்பு. தறகொண்டான் –

தன்புருஷன்

வளத்தக்காள் - வரவுக்குத்தக்கவள்.

இலலறத்துகுத்தகுந்த மாட்சிமையுடையவளாகித் தன் புருஷனின் வரவுக்குந்தக்கபடி செலவு செய்கிறவள் வாழ்க்கைக்குத்துணையாவாள்.

52. மனைமாட்சியில்லாள் கணில்லாயின்வாழ்கை
யெனைமாட்சித்தாயினுமில்.

உ

எனை - எவ்வளவு.

இல்லறந்தக்குத்தக்க சிறப்பு அவளிடத்தில் இல்லாதிருந்தால் அவ்வில்வாழ்க்கை எவ்வளவு சிறப்புடையதாகிலும் ஒன்றுமம இல்லை.

53. இல்லதெனில்லவண் மாண்பானுலுள்ளதெ
னில்லவண் மாணுக்கடை.

க

மாணுக்கடை - மாட்சியில்லாத இடத்தில்.

மனைவி மாண்பானல் இல்லாதது என்ன. அவள் மாண்பற்றவளானல் உள்ளது என்ன.

54. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மை யுண்டாகப் பெறின்.

ச

பெருநதக்க - பெருமையுள்ள. திண்மை - பலம்.

கற்பென்னும் பலமதைப் பெற்றிருந்தால் பெண்ணைப் பார்க்கிலும் மாட்சிமையுள்ளவை என்ன.

55.

தெய்வந்தொழா அள்கொழுநற்றொழுதெழுவாள்
பெய்யெனப்பெய்யுமழை. ரு

கொழுநன் - புருஷன்.

தெய்வத்தைத்தொழாமல் தன் புருஷனைதொழுது எழுந்திருப்பவள் பெய்யெனறு சொல்ல மழைபெய்யும்.

அறத்துப்பால்.

56

தற்காத்துத் தற்கொண்டாற்பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். சு

பேணி - காத்து. தகை - நன்மை. சான்ற - நிறைந்த

தன்னைக்காத்துத் தன் புருஷனைப்பேணி நன்மை நிறைந்த சொல்லைக்காத்துச் சோர்வில்லாதவள் பெண்ணாவாள்.

7. சிறைகாக்குங் காப்பெவன் செய்யுமகளிர்
நிறைகாக்குங் காப்பேதலை.

எ

எவன் - என்ன. நிறை - கற்பு.

பெண்களைச்சிறையில் வைத்துக் காக்குங் செய்யும்; அவர்களே தங்கள் கற்பைக்காத்தல்

காப்பு என்ன
தலையாம். 58.

பெற்றாற்பெறிற்பெறுவர்பெண்டிர்பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழுமுலகு.
௫அ

புத்தேளிர் - தேவர்.

மனைவிகள் தங்கள் கணவரை வணங்கினால் உலகில் பெருஞ் சிறப்பைப்பெறுவார்கள்.

தேவர்வாழும் 59.

புகழ்புரிந்தில்லிலோர்க்கில்லை யிகழ்வார்முன்
னேறுபோற்பீடு நடை. ௬

புரிந்த - விரும்பின. ஏறு - ஆண்சிங்கம். பீடு - பெருமை.

புகழை விரும்பும் மனைவியில்லாதவர்களுக்கு இகழ்பவர்களுக்குமுன் ஆண்சிங்கம் போல்நடக்கும் பெருமைபொருந்திய நடையிராது.

60. மங்கலமென்பமனை மாட்சி மற்றத
னன் கலனன் மக் கட்பேறு .
௰

கலம் - ஆபரணம். பேறு - பெறுதல்.

மனைவியின் மாட்சியை ம ங் கலமென் று சொல்லுவார்கள் நல்லபிள்ளைகளைப்பெறுதலே நல்ல ஆபரணம் என்பார்கள்



## 7. புதல்வரைப்பெறுதல. 61.

பெறுமவற்றுள் யாமறிவதில்லை யறிவறிந்த
மககட்பேறல்ல பிற.

உ

பெறும்வஸ்துக்களில் அறியவேண்டியவைகளை அறிந்தபிள்ளைகளைப பெறுதலையன்றி மற்றவைகளை நாம் மதிபபதில்லை.

62. எழுபிறபபுந் தீயவைதீண்டா பழிபிறங்காப்
பணபுடை மககடபெறின்.

உ

தீண்டா – தொடாது. பிறங்கா – உண்டாகாத.
ஒருவன் பழியுண்டாகாத தகுதியான மக்களைப் பெற்றால் எழுபிறபபிலும அவனைத தீயவை தொடாது.

63. தம்பொருளென்பதம் மக்களவர் பொரு
டந தம் வினையான்வரும.

உ

(டந்தம்: ள், தம்தம்.)
தங்கள் பிள்ளைகளைத் தஙகள் பொருளென்று சொலலுவாரகள். அவர்கள தேடின பொருள் தங்கள் தஙகள வினையால் வரும்.

64 அமிழ்தினு மாற்றவினிதே தம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்.

உ

ஆற்ற – மிகவும். அளாவிய – அளைந்த.
தமது பிள்ளைகளின் சிறுகை அளாவியகூழ்

அமிர்தத்தி லும் மிகவும இனிது.

65. மக்கண் மெய்தீண்டலுடற்கின்ப மற்றவர்
சொறகேட்ட லின்பஞசெவிக்கு.

௫

பிள்ளைகள் உடம்பைத்தொடுதல் தேகத்துக்கின்பம். அவர் கள் சொல்லைக கேட்டல காதுக்கு இனபம்.

66. குழலினிதியாழினி தென்பதம் மக்கண்
மழலைச்சொற் கேளாதவர்.

யாழ் - வீணை.

தங்கள் பிள்ளைகளின மழலைச் சொல்லைக் கேளாதவர்கள் குழல்இனிது, வீணை இனிது எனபாாகள்.

67. தநதை மகற்காற்று நன்றியவையத்து
முந்தியிருபபச செயல்.

எ

மகற்கு - மகனுக்கு. ஆறறும் - செய்யும். அவையம் - சபை.

தகப்பன் பிளளைகருச் செய்யும் நன்மையானது சபையில் முந்தியிருககும்படிசெயதலாம.

68. தம்மிற்றம் மக்களறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க கெலலா மினிது.

அ

தம்மில - தங்களைப்பார்க்கிலும். மன் - நிலைபெற்ற.

தங்களைப பாாக்கிலுந தங்கள் பிள்ளைகள் அறிவுடையவர் களாயிருபபது மாஉலகததில நிலைபெற்றற உயிாகளுககெல்லாம இனிது.

69. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந்தன்மகனைச்
சான்றோனெனக் கேட்டதாய்.

சு

பொழுதில் - காலத்திலும். உவக்கும் - மகிழும்.
தன் மகனை அறிவுடையவனென்று கேட்ட தாய் அவனைப் பெற்றகாலத்தில் அடைந்த சந்தோஷத்திலும் தோஷமடைவாள்.

அதிகச் சந்

70. மகன்றந்தைக் காற்றுமுதவியிவன்றந்தை
யெனநோற்றான் கொலலென்னுஞ்சொல.

ம

ஆற்றும் - செய்யும். நோற்றான் - தவஞ்செய்தான்.
மகன தகப்பனுக்குச் செய்யுமஉதவி, இவனுடைய தந்தை என்ன தவஞ்செய்து பெற்றானோ என்னுஞ் டாக்குதலாம.

சொல்லை யுண்



அறததுபபால

## 8. அன்புடைமை.

71. அன்பிற்கு முண்டோவடைக்குந்தாழார்வலர்
புன்கணீர் பூசறரும்.

க

தாழ் - தாழ்ப்பாள். ஆர்வலர் - அன்புடையவர்.
ரும் (பூசல், தரும்) - ஊற்றும்.

பூசற

அன்பிற்கும் அடைக்குந் தாழ்ப்பாளுண்டோ.
அன்புடையவரின் புல்லிய கண்ணீர் அதைத் தெரிவிக்கும்.

72. அன்பிலாரெல்லாந் தமக்குரியரன்புடையா
ரென்புமுரிய பிறர்க்கு.

என்பு - எலும்பு.

அன்பில்லாதவர் எல்லாவற்றிலுந் தமக்கே உரியவர்; அன்புடையவர் எலும்பும் பிறருக்கு உரியது.

73. அன்போடியைந்த வழக்கென்பவாருயிர்க்
கென்போடியைந்த தொடர்பு.

ந

இயைந்த - பொருந்திய. வழக்கு - நடபடி.
தொடர்பு - தொடர்ச்சி.

ஆர் - அரிய.

அரிய உயிர்க்கு எலும்போடு கூடிய சம்பந்தத்தை அன்போடுகூடிய வழக்கென்பார்.

74. அன்பீனுமார்வமுடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச்சிறப்பு.

ச

ஆர்வமுடைமை - ஆசை. நாடா - கெடாத.

அன்பு ஆசையைக் கொடுக்கும், அது சிநேகமென்னுங் கெடாத சிறப்பைத் தரும்.

75. அன்புற்றமர்ந்த வழக்கென்பவையகத்
இன்புற்றாரெய்துஞ் சிறப்பு.

௫

உற்று - ஆகி. உற்றார் - அநுபவித்தவர். எய்தும் அடையும்.

இவ்வுலகில் இன்பத்தை அநுபவித்தவர்கள் அடையுஞ் சிறப்பை அன்போடு கூடியவழக்கென்பார்.



76. அறத்திற்கே யன்புசார்பென்ப வறியார்
மறத்திற்குமஃதே துணை.

மறம் - கோபம்.

அறியாதவர்கள் அறத்திற்கு அன்பு உதவிஎன்பார்கள்
கோபத்திற்கும் அதுவே துணை.

77. என்பிலதனை வெயிற் போலக்காயுமே
யன்பிலதனை யறம்.

௭

எலும்பில்லாததை வெயில் சுடுவதுபோல் அன்பில்லாததைத் தர்மக்கடவுள் சுடும்.

78. அன்பகத்தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த்தற்று.

௮

வன்பாற்கண் - பாலைநிலத்தில். வற்றல் - காய்ந்த.

மனதில் அன்பற்ற உயிர்வாழ்க்கை கடினமான பூமியிலுள்ள உலர்ந்த மரந்தளிர்த்ததைப்போலாம்.

79. புறத்துறுப்பெல்லாமெவன் செய்யும் யாக்கை
யகத்துறுப்பன்பிலவர்க்கு.

௯

எவன் - என்ன. யாக்கை - சரீரம். அ/. ஃ
உடம்பின் அகமாகிய அவயவத்தில்
அன்பில்லாதவர்க்குபுற உறுப்புகள் எல்லாம்
என்னசெய்யும்.

80. அன்பின் வழியதுயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த உடம்பு.

ώ

உயிர்நிலை - சரீரம்.

அன்பின் வழியது சரீரம்; அன்பில்லாதவர்களுக்கு
தோல் மூடின உடம்பாகும்.

எலும்பு



KURAL I. 2 வது
அறத்துப்பால்.

## 9. விருந்தோம்பல்.

81.

இருந்தோம்பியில்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. க

ஓம்பி - காப்பாற்றி. வேளாண்மை - உபகாரம்.
இல்லறத்திலிருந்து பொருளைப்பாதுகாத்து

வாழ்வதெல்லாம் விருந்தினரைக்காப்பாற்றி அவர்களுக்கு
யும் பொருட்டாம்.

உபகாரஞ்செய் 82. விருந்து புறத்ததாத்தானுணடல
சாவா

மருந்தெனினும் வேண்டற் பாற்றன்று.

உ

புறத்ததா - வெளியே இருக்க. (ஆ - ஆக.)
தேவ அமிர்தமாயிருந்தாலும் விருந்தாடிகள்
வெளியே இருக்கத் தான் சாப்பிடுதல் தக்கதல்ல.

83.

வருவிருந்து வைகலுமோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதலின்று. ந

வரு - வந்த. வைகலும் - நாள்தோறும்.
பரு

வருத்தம். பாழ்படுதலின்று - கெடுவதில்லை.
தன்வீட்டிற்கு வந்த விருந்தாடிகளை
ஒவ்வொருநாளும் பாதுகாப்பவனின் வாழ்க்கை
வருந்திக்கெடுவதில்லை.

84. அகனமர்ந்து செய்யாளுறையு முகனமர்ந்து
நல்விருந்தோம்புவானில்.

ச

அகன் - மனம். அமர்ந்து - பொருந்தி.
செய்யாள்

இலட்சுமி. உறையும் - வாசம்பண்ணும்.
முகம்மலர்ந்து நல்லவிருந்தாடிகளைப்

பாதுகாப்பவன்வீட்டில் இலட்சுமி அகமலர்ந்து வாசம்பண்ணுவாள்.

85.

வித்துமிடல் வேண்டுங் கொல்லோவிருந்தோம்பி மிச்சின் மிசைவான் புலம். ரு

இடல் - விதைத்தல். மிச்சில் - மீர்ந்திருக்கிறது
மிசைவான் - உண்பான். புலம் - வயல்.

விருந்தினரைப்பாதுகாத்து மீந்திருப்பதைச் சாப்பிடுகிறவனின் வயலுக்கு விதையும் விதைக்கவேண்டுமோ.

அறத்துப்பால்.

86. செல்விருந்தோம்பி வருவிருந்து
ணல்விருந்து வானத்தவர்க்கு.

பார்த்திருப்பா

ன

செல்லுகிற விருந்தினரைப்பாதுகாத்து
ருக்கு எதிர்பார்த்திருப்பவன் தேவர்களுக்கு

வரும் விருந்தின
நல்ல விருந்தாடி
யாவான்.

87. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன்.

ன

இனை - இன்ன. துணைத்து - அளவையுடையது.

வேள்

வி - உபகாரம்.

உபகாரத்தின் பிரயோசனம் இன்னின்ன அளவையுடைய தென்று சொல்லக்கூடாது. விருந்தின் அளவே அளவாம்.

38.

பரிந்தோம்பிப் பற்றற்றேமென்பர் விருந்தோம்பி வேள்வித்தலைப்படாதார்.

பரிந்து

ஞேம்.

- வருந்தி. பற்றற்றேம் - ஆதரவற்றவர்களா

தலைப்படாதார் - அடையாதவர்.

விருந்தினரைக்காப்பாற்றி அதினால் உண்டாகும் பிரயோசனத்தை அடையாதவர்கள் பொருளை வருந்திப் பத்திரப்படுத்தி ஆதரவற்றுப் போனேமென்பார்கள்.

89. உடைமையுளின்மை விருந்தோம்பலோம்பா
மடமை மடவார்களுண்டு.

இன்மை - தரித்திரம். மடமை - பேதைமை.

விருந்தோம்பலாகிய உபகாரத்தைச்செய்யாத

அறிவீனம்

பொருளிருக்குங்காலத்தில் தரித்திரம். அது

லுண்டு.

அறிவீனரிடத்தி

90. மோப்பக்குழையு மனிச்சமுகந் திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

௰

குழையும் - வாடும். திரிந்து - வேறுபட்டு.
மோக்க.)

(மோப்ப,

மோந்தால் அனிச்சப்பூவாடும். முகம் வேறுபட்டு
இனல் விருந்தாடி வாடுவான்.

நோக்





## 10. இனியவைக் கூறல்.

91. இன்சொலாலீரமளை இப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

க

ஈரம் - அன்பு.
செம்பொருள் -

அளைஇ - கலந்து. படிறு - வஞ்சனை.
அறப்பொருள். (ளைஇ, உயிரளபெடை.)

அன்போடுகலந்து வஞ்சனையற்றவைகளாயிருக்கும்
அறப் பொருளைக் கண்டறிந்தவருடைய வாயின் சொற்களே
இனிய சொற்களாம்.

92. அகனமர்ந்தீதலினன்றே முகனமர்ந்
தின் சொலனாகப் பெறின்.

உ

அமர்ந்து - மகிழ்ந்து. ஈதல் - கொடுத்தல்.

முகம்மலர்ந்து இனியசொல்லையுடையவனாயிருத்தல்
மலர்ந்து கொடுத்தலினும் நல்லது.

அகம்

93. முகத்தானமர்ந்தினிது நோக்கியகத்தா
னின்சொலினதே யறம்.

௩

முகத்தால் விரும்பி இனிதாகநோக்கி
மனதோடுகூடிய இன்சொல்லையுடையதே அறம்.

94. துன்புறூஉந் துவ்வாமையில்லாகும்யார்மாட்டு
மின்புறூஉ மின்சொலவர்க்கு.

௪

துன்பு - துன்பம். உறும் - உண்டாகும். துவ்வாமை வறுமை. இல்லாகும் - இல்லை.

யாவரிடத்திலும் இன்பத்தைக்கொடுக்கும் இனியசொல்லையுடையவர்க்குத் துன்பத்தைக்கொடுக்கும் வறுமையில்லை.

95. பணிவுடையனின் சொலனாதலொருவற்
கணியல்ல மற்றுப்பிற.

௫

அணி - ஆபரணம். (மற்று, அசைநிலை.)

வணக்கமுடையவனாயிருத்தலும் இனியசொல்லையுடையவனாயிருத்தலும் ஒருவனுக்கு ஆபரணமாம். மற்றது ஆபரணமல்ல.

96. அல்லவை தேய வறம் பெருகு நல்லவை
நாடி யினியசொலின்

அ

அல்லவை - பூாவம். தேய - குறைய.

நல்லவைகளை நாடி இனியசொற்களைச் சொன்னால் குறையத் தர்மம் பெருகும்.

பாவம்

97. நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண் பிற்ற லைப்பி ரி யாச்சொல்

எ

நயன் - நீதி. பயக்கும் - தரும். பண்பில் - விருந்து. தலைப்பிரியா - நீங்காத.

குணத்தி

:

பயனை உண்டாக்கி நற்குணத்தினின்றும் நீதியைக்கொடுத்து நன்மையைத்தரும்.

நீங்காதசொல் 98.

சிறுமையுணீங்கிய வின் சொன் மறுமையு
மிம்மையுமின்பந் தரும். அ

சிறுமை - வறுமை,

சிறுமையினின்று நீங்கிய இனியசொல் இம்மையிலும் இன்பந்தரும்.

மறுமையிலும்        99.

இன்சொலினி தின்றல் காண்பானெவன்கொலோ
வன்சொல் வழங்குவது. ௯௯

வன்சொல் - கடுஞ்சொல். வன் = வலிய, strong

இனியசொல் இனிமையைக்கொடுக்கிறதைக்
கடுஞ்சொல்லைச் சொல்லுவதேன்.

காண்பவன்

100. இனியவுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந்தற்று.

ல

இன்னாத - இன்பமற்ற. கவர்ந்தற்று
போலும். (இருப்ப, இருக்க.)

- சாப்பிட்டால்
to seize, take, have

இனியசொற்கள் உண்டாயிருக்க இன்பமற்றவைகளைச்
சொல்லுதல் பழம் இருக்கக் காயைச்சாப்பிட்டதுபோலாம்.



அறத்துப்பால்.

## 11. செய்ந்நன்றியறிதல். 101.

செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும
வானகமுமாற்றலரிது.

க

வையகம் - பூமி. வானகம் - வானம்.
கைம்மாறுககொடுத்தல்.

ாாக்கல் தனக்கு முன்னொரு நன்மையுஞ்
செய்த உதவிக்கு வானமும் பூமியுங்
தல் போதாது.
செய்யாதிருக்கையில்
கைம்மாறுகக்கொடுத் 102. காலத்தினாற் செய்த நன்றி
சிறிதெனினு
ஞாலததின் மாணப்பெரிது.

உ

மாண - மிகவும்.
(அன்ப) காலத்தில் செய்த நன்மை சிறிதாகிலும்
அது பூமியைபபார்க்க மிகவும் பெரியது.
103. பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
னன்மை கடலிற் பெரிது.

ங

தூக்கார் - ஆராயாதவர். தூக்கின் - ஆராய
தால்.
ந்தயார்த்
பயனை ஆராயாதவராய்ச் செய்த உதவியின
நன்மையை ஆராயந்தால் அது கடலிலும் பெரியதாம்,
104. தினைத்துணை நன்றி செயினும்
பனைத்துணையாக்
கொள்வர் பயன் றெரிவார்.

ச

துணை - அளவு.
தினை அளவு நன்றிசெயதாலும பயனை
அறிநதவர்கள் அதைப்பனையளவாகக்கொள்வார்கள்.

105. உதவிவரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின்வரைத்து.

ரு

வரைத்து - அளவுடையது. சால்பின் - தகுதி.
உதவியானது உதவியின் அளவையுடையதல்ல.
உதவியைப்பெற்றவரின் தகுதி (அதின) அளவாம்.

அறத்துப்பால்.

106. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட்டுப்பாயார் நட்பு.

கேண்மை - சிநேகம். துப்பாயார் - சகாயமானவர்.

மாசற்றவரின் சிநேகத்தை மறவாதே.
சகாயஞ் செய்தவர் அன்பைவிடாதே.

துன்பகாலத்தில் 107.

எழுமை யெழுபிறப்புமுள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு. எ

எழுமை - எழுமைத்தனம்.
விழுமம் - கண்ணீர்.
உள்ளுவர் - நினைப்பார்
தங்கள் கண்ணீரைத் துடைத்தவரின் சிநேகத்தை

எழ்மைத் தனமுடைய எழுபிறப்பிலும் நினைப்பார்கள்.

108. நன்றிமறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

அ

ஒருவர் செய்த நன்றியை மறப்பது நல்லதல்ல. அவர் செய்த தீமையை உடனே மறப்பது நன்மை.

109. கொன்றன்ன வின்னா செயினுமவர் செய்த
வொன்று நன்றுள்ளக்கெடும்.

அன்ன - போலும். இன்னா - துன்பம்.

கொன்றதை ஒத்ததுன் பஞ் செய்தாலும் அவர் செய்த ஒரு நன்மையை நினைத்தால் அது இல்லையாகும்.

110.

எந்நன்றிகொன்றார்க்கு முய்வுண்டாமுய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

கொன்றார் - கெடுத்தவர். உய்வு - ஈடேற்றம்.

எந்த அறத்தைக்கெடுத்தவர்களுக்கும் ஈடேற்றம் உண்டாம். செய்த நன்றியை அழித்தவனுக்கு ஈடேற்றமில்லை.



அறத்துப்பால்.

## 12. நடுவுநிலைமை.

111. தகுதியெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட்டொழுகப்பெறின்.

க

தகுதி - நடுவுநிலைமை. பகுதி - பிரிவு.

பாற்பட்டு

முறைமை காத்து.

பிரிவினால் முறைமையை விடாமல் நடந்தால் தகுதி
இற ஒன்று நல்லதுதான்

என் 112. செப்பமுடையவனுக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற்கேமாப்புடைத்து.

உ

செப்பம் - நடுவுநிலைமை. சிதைவு - கேடு.
பிள்ளைகள். ஏமாப்பு - உறுதி.

எச்சம்

நடுவு நிலைமையுடையவனின் செல்வங்
கெடுதலில்லாமல் அவன் சந்ததிக்கு உறுதியாயிருக்கும்.

113. நன்றே தரினு நடுவிகந்தாமாக்கத்தை
யன்றே யொழியவிடல்.

ந

தரினும் - தந்தாலும். இகந்து - நீங்கி.

நன்மையைத்தந்தாலும் நடுவுநிலைமை தப்பிவருஞ்
வத்தை உடனே ஒழித்துவிடுக.

செல்

114. தக்கார் தகவிலரென்பதவரவ
ரெச்சத்தாற் காணப்படும்.

ச

தகவு - நடுவுநிலைமை.

நடுவு நிலைமையுடையவரோ அது இல்லாதவரோ என்பது அவரவர் சந்ததியாற் காணப்படும்.

115. கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க்கணி.

கோடாமை - சாயாமை.

கெடுதலும் பெருகுதலும் இல்லாதவையல்ல, (ஆதலால்) மனதில் கோணாதிருப்பதே சான்றோருக்கு ஆபரணம்.

அறத்துப்பால்

116. கெடுவல யானென்பதறிக தன்னெஞ்ச
நடுவொரீஇ யல்லசெயின்.

கெடுவல் - கெடக்கடவன். ஒரீஇ (ஒருவி) - நீங்கி.

ஒருவன் மனம் நடுவுநிலைமையிலிருந்து நீங்கிப்பாவமானதைச்செய்தால் நான் கெட்டுப்போவேனென்பதை யறியக்கடவன்.

117. கெடுவாக வையா துலக நடுவாக
நன்றிக்கட் டங்கியான்றாழ்வு.

தங்கியான் - நிலைத்திருந்தவன். (நன்றிகட் - கண்.)

நன்றி

நடுவுநிலைமையில் தரித்திருந்தவனுக்குண்டாகும் வறுமையைக்கெடுதியாக உயர்ந்தோர் நினைக்கமாட்டார்கள்.

118.

சமனசெய்துசீர்தூக்குங்கோல்போலமைந்தொரு
கோடாமை சான்ருேர்க்கணி. [பாற் அ

சமன்செய்து - சமமாக்கி. பால் - பக்கம்.

சமமாக நின்று தன்னில் வைப்பதைச் சரிய ாய் க் காட்டுந்
துலாகக்கோலைப்போல் அமைந்து ஒருபக்கத்திலுஞ்
விருபபதே சானருேருககு ஆபரணம.

சாயாம 119.

சொற்கோட்டமில்லது செப்பமொருதலையா
வுட்கோட்டமின்மை பெறின். சூ

கோட்டம் - கோணல்.

மனதில் ஒருபக்கஞ்சாயுங் கோணலில்லாமையைப்பெற்ருல் சொல்லில கோணலில்லாமையே நடுவு நிலைமையாம்.

120. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்.

ம

பிறருடைய பொருட்களைத் தமது பொருட்களைப்போல் பேணிச்செய்தால் வியாபாரஞ் செய்பவர்களுக்கு நல்ல வியாபாரமாம்.



## 13. அடக்கமுடைமை. 121.

அடக்கமமாருளுய்க்கு மடங்காமை
யாரிருளுய்த்துவிடும.

அமரர் - தேவர். உயக்கும் - செலுத்தும். ஆர் - நிறைநத.

அடக்கம தேவர் இருக்கு மிடத்தில் செலுத்திவிடும். அடங்காமை இருள் நிறைநத நரகத்தில செலுத்திவிடும்.

122. காகக பொருளா வடக்கத்தையாகக
மதனினூஉங கில்லை யுயிர்க்கு.

உ.

ஊங்கு (ஊஉங்கு) - மேற்பட்ட.

அடக்கததை ஆஸ்தியாகக் காப்பாயாக. அதற்குமேற்பட்ட செல்வம ஆததுமாவுககு இல்லை.

123. செறிவறிந்து சீர்மை பயககுமறிவறிந்
தாற்றினடஙகப்பெறின்.

ந.

செறிவு - அடக்கம். சீர்மை - சிறபபு.

அறியவேண்டியவைகளை அறிநது நல்வழியில் நடந்தால் அவ்வடக்கம அறியப்பட்டுச் சிறபபைககொடுககும். 124. நிலையிற்றிரியாதடங்கியான் றோற்ற
மலையினுமாணப் பெரிது.

ச

தோறறம் - உயாச்சி. மாண - மிக.

தன் நிலையில் வேறுபடாமல் அடங்கினவனின்
மலையிலும் மிகப் பெரிதாம்.

தோற்றம்

125. எல்லார்க்கு நன்றும் பணிதலவருள்ளுஞ்
செலவர்க்கே செல்வந் தகைத்து.

௫

தகைத்து - தகுதியானது.
அடககம் எல்லாருக்கும் நனறாகும்.
அவர்களுக்குள்ளுஞ் செலவமுடையவருக்கே அது
செலவததின தகுதியையுடையதாகும்.

அறத்துப்பால். ௨௪

126. ஒருமையுளாமைபோ லைந்தடக்கலாற்றி
னெழுமையு மேமாப்புடைத்து.

ஒருமை - ஒருபிறப்பு. ஆற்றின - செய்தால்.
ஒருவன் ஒருபிறப்பில் ஆமையைப்போல்
யும் அடக்கவல்லவனாகில் அது அவனுக்கு
உறுதியாகும்.
ஐந்துறுப்புகளை
எழுபிறப்பிலும் 127. யா காவாராயினு நா காக்க கா
வாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப்பட்டு.
ன்

சோகாப்பர் - துன்பப்படுவர். இழுக்குப்பட்டு -
றத்திலகப்பட்டு.
குற்

எல்லாவற்றையுங் காக்காவிட்டாலும் நாவைக்காக்கக்கடவார். அதைக்காக்காவிட்டால் சொல் குற்றத்திலகப்பட்டுத் துன்பம அடைவார.

128. ஒன்றானுந் தீச்சொற்பொருட பயனுண்டாயி
னன்றாகாதாகி விடும்.

அ

தீயசொல்லின்
அவனிடத்திலுள்ள

பொருளால் ஒரு பயனுவது வந்தாலும்
நன்மை எல்லாந தீமையாகிவிடும். 129. தீயினாற்

சுட்டபுணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு.

௬ நெருப்பினுல் சுட்டபுண் உள்ளேஆறிப்போகும். நாற் சுட்டவடுஆறாது.

நாவி 130. கதங்காத்துக கறறடஙக
லாறறுவானமுசவவி
யறம்பார்க்கு மாற்றினுழை ந்து .

ம

கதம் - கோபம். ஆற்றுவான் - வல்லவன். சமயம்.

செவ்வி

கோபம்வராமல் காத் துப் படித்து அடங்கவல்லவனின் சம யத்தை அறக்கடவுள் பார்த்து அவன் வழியில் நுழையும்.



அறத்துப்பால்

## 14. ஒழுக்க முடைமை.

131. ஒழுக்கம் விழுப்பந்தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்.

க

விழுப்பம் - சிறப்பு. ஓம்பி - காக்க.

ஆசாரஞ் சிறப்பைத் தருகிறபடியால் அவ்வாசாரஞ் னைப் பார்க்கிலுங் காக்கப் படவேண்டியது.

சிவ

132. பரிந்தோம்பிக்காக்க வொழுக்கந்
தேரினுமஃதே துணை.

தெரிந்தோம்பித்

உ

பரிந்து-வருந்தி. ஓம்பி - பேணி.
தேரின்-தெளிந்தால்.

ஒழுக்கத்தை வருந்திப் பேணிக்காக்கக் கடவாய். (பலவற் றை) ஆராய்ந்து தெளிந்தாலும் அதுவேஉனக்குத்துணையாகும்.

133. ஒழுக்கமுடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்.

ங

குடிமை - குலம். இழுக்கம் - தவறுதல். இழிந்த தாழ்ந்த.

- ஆசாரமுடைமை உயர்குலமாம். ஆசாரத்தினின்று தல் இழிகுலமாம்.

வழுவு 134. மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக்கெடும்.

௪

ஒத்துக்கொளல் – கற்றுக்கொள்ளல்.
பார்ப்பான்படித்ததை மறந்துபோனால் அதைத்திரும்ப வுங் கற்றுக்கொள் ளலாம்; தன் பிறப்பொழுக்கங்குறைந்தால் அது கெடும்.

135. அழுக்கா றுடையான்கணாக்கம் போன்றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு.

௫

அழுக்காறு - பொறாமை.
பொறாமையுடையவனிடத்தில் செல்வம் இல்லாததுபோல் ஒழுக்கமில்லாதவனிடத்தில் உயர்வில்லை.



136. ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து.

௬

ஒல்கார் - தளரார். உரவோர் - பெரியோர்.
ஏதம் - இழிவு. படுபாக்கு - உண்டாக.

ஒழுக்கத்தவறுதல் இழிவுண்டாவதை
அறிந்து ஒழுக்கத்தினின்று தளரார்.

அறிவுடையோர் 137.

ஒழுக்கத்தினெய்துவர் மேன்மையிழுக்கத்தி
னெய்துவரெய்தாப் பழி எ

எய்துவர் - அடைவர். எய்தா - அடையக்கூடாத.

ஒழுக்கத்தினால் மேன்மையை அடைவார். இழுக்கத்தினால் அடையத்தகாத பழியையடைவார்.

138. நன்றிக்குவித்தாகு நல்லொழுக்கந்
மென்றும் இடும்பை தரும்.

தீயொழுக்க
அ கம்

நல்லொழுக்கம் நன்மைக்கு விதையாகும். தீயவொழுக்
எப்போதும் துன்பத்தைத் தரும்.

139. ஒழுக்கமுடையவர்க் கொல்லாவேதீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

ஒல்லா - கூடாது. வழுக்கி - மறந்து.

மறந்தும் தீயவைகளை வாயால் சொல்லல்
ஒழுக்கமுடையவராகுககூடாது.

140. உலகத்தோடொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லாரறிவிலாதார்.

ம

ஒட்ட - பொருந்த.

உயர்ந்தோரோடு பொருந்த நடத்தலைப் படியாதவர் பல வற்றைக்கற்றாலும்அறிவில்லாதவராவார்.



அறத்துப்பால்.

## 15. பிறனில்விழையாமை.

141. பிறன் பொருளாட்பெட்டொழுகும் பேதைமைஞா [லத்
தறம்பொருள் கண்டார் கணில்.

க

பொருளாள் - பெண்சாதி. பெட்டு - இச்சித்து.

பிறன் பெண்சாதியை இச்சித்து நடக்கும் அறிவின்மை பூமியில் அறப்பொருள் கண்டவரிடத்தில் இல்லை.

142. அறன்கடை நின்றாருளெல்லாம் பிறன்கடை „
நின்றாரிற் பேதையாரில்.

உ

அறன்கண்ட - அறத்துக்குப்புறம்பே. பிறன்கடை பிறன்வீட்டின்தலைக்கடை.

பாவவழியில் நிற்கிற எல்லாருள்ளும்
யில் நின்றவரைப் பார்க்க அறிவீனரில்லை.

பிறன் தலைக்கடை— 143.

விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
றீமைபுரிந்தொழுகுவார். ௩.

விளிந்தார் - செத்தவர். மன்ற - நிச்சயமாக.
சந்தேகமின்றித் தெளிந்தவரின் மனைவியிடத்தில்
செய்து நடப்பவர் செத்தவருக்கு ஒத்தவர்.

தீமை

144. எனைத்துணையராயினுமென்னாந்
தேரான் பிறனில் புகல்.

தினைத்துணையுந்
ச

தேரான் - உணராமல்.
தினையளவும் உணராமல் பிறன்வீட்டில் புகுகிறவர்கள்
எவ்வளவு பெருமையுடையவர்களாயிருந்தாலும் என்ன பிர
யோசனம்.

145.

எளிதெனவில் லிறப்பானெய்து மெஞ்ஞான்றும்
விளியாது நிற்கும் பழி. ரு

இறப்பான் - புகுவான். விளியாது - நீங்காமல்.

எளிதென்று பிறன்வீட்டில் நுழைபவன் என்றைக்கும்
நீங்காமல் நிற்கும் பழியை அடைவான்

அறத்துப்பால். கக

146. பகைபாவ மச்சம்பழியென நான்கு
இகவா வாமில் லிறப்பான் கண்.
சு

இகவாவாம்- நீங்காதாம்.
பகை, பாவம், அச்சம், பழிஎன்னும் நான்கும்
ல் புகுபவனைவிட்டு நீங்காது.

பிறன்வீட்

147.
அறனியலா னில்வாழ்வானென்பான்பிறனியலாள்
பெண்மை நயவாதவன்.
எ

இயலால் - இயலையுடைய. நயவாதவன் - விரும்
பாதவன்.
பிறன் சொத்தாகிய பெண்சாதியை விரும்பாதவன்
அறமாகிய இல்வாழ்வானென்னப்படுவான்.
148 . பிறன்மனைநோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு.
அ

பேராண்மை - பெரியஆண்மை. ஆன்ற - நிறைந்த.

பிறன் பெண்சாகியை நோக்காத பெரும்ஆண்மை சான்றோர்க்குத் தர்மமாத்திரமா; நிறைந்த ஒழுக்கமுமாம்.

149. நலக்குரியார் யாரொனிநும நீர்வைப்பிற்
பிறற்குரியா டோடோயாதார்.

நலம் - நன்மை. நாமம் - அச்சம்.
டோடோயாதார்
(ள், தோள், தோயாதார்) - சேராதவர்.

அச்சந்தரும் நீரால் சூழப்பட்டிருக்கிற பூமியில் நன்மைக் குரியவர் யாரென்றால் பிறன் மனேவியின் தோளைச் சேராதவராம.

150. அறன் வரையானல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நனறு.

வரையான் - உரிமையுள்ளவன்.
தர்மஞ் செய்யாமல் பாவஞ் செய்கிறவனாயிருந்தாலும் பிறன் அத்துக்குள் பட்டவளை விரும்பாமை நன்மையாம்.





## 16. பொறையுடைமை.

151. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்தறலே. க

அகழ்வார் - தோண்டுகிறவர்கள்.

தன்னைத்தோண்டுகிறவர்களைத் தாங்கும் நிலத்தைப்போல் தன்னை இகழ்வாரைப் பொறுத்தல் தலையானதாம்.

152. பொறுத்தலிறப்பினை யென்றுமதனை
மறத்தலதனினு நன்று. ௨

இறப்பினை - இகழ்ச்சியை.

மற்றவர்களால் உண்டாகும் இகழ்ச்சியை எப்போதும் பொறுத்துக்கொள். அதை மறத்தல் அதனிலும் நல்லது.

153. இன்மையுளின்மை விருந்தொராஅல்வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. ௩

ஒரால் - தள்ளிவிடுதல். வன்மை - வல்லமை. மடவார் - அறிவீனர். பொறை - தாங்குதல்.

தரித்திரத்துள் தரித்திரம் விருந்தினரைத் தள்ளிவிடுதல்; வல்லமையுள்வல்லமை அறிவில்லாதவரைப் பொறுத்தல்.

154. நிறையுடைமை நீங்காமைவேண்டிற் பொறையு
போற்றி யொழுகப்படும். [டைமை ௪

உடைமை - தன்மை.

நிறைந்த தன்மை நீங்காதிருக்க விரும்பினால் பொறுமையுடைமையைக் காத்து நடக்கவேண்டும்.

155. ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப்பொன் போற்பொதிந்து. ௫

ஒறுத்தார் - தண்டித்தவர். ஒன்றாக - ஒருபொருளாக. பொதிந்து - பத்திரப்படுத்தி.

பதிலுக்குப்பதில் செய்தவரை ஒரு பொருளாகவையார். பொறுத்தவரைப் பொன்போல் பத்திரப்படுத்திவைப்பார்.

156. ஒறுத்தார்க்கொருநாளை யின்பம்பொறுத்தார்க்குப்
பொன்றுந்துணையும் புகழ். கஉ

பொன்றுந்துணையும் - அழியுமளவும்.

தண்டித்தவர்க்கு ஒருநாளை இன்பம்; உலகம் அழியுமளவும் புகழாம்.

பொறுத்தவர்க்கு

157 திறனல்ல தற்பிறர் செய்யினுநோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.

எ

திறன் - அறம். நோநொந்து - துன்பத்திற்கு வருந்தி.

அதர்மமானவைகளைத் தனக்குப் பிறர்செய்தாலும் வருந்தி அவர்களுக்குத் தர்மமல்லாதவைகளைச் செய்யாமை நன்று. 158. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்

தகுதியான் வென்று விடல்.

அ

மிகுதி - அகங்காரம். மிக்கவை - தீயவை.

அகங்காரத்தால் தீயவைகளைச் செய்தவரைத் தாம் தமது பொறுமையினால் மேற்கொள்ளக்கடவரர்

159. துறந்தாரிற் றூய்மையுடைய ரிறந்தாரவா
யின்னாச் சொனோற்கிற்பவர். கூ

துறந்தாரில் - முனிவரைப்பார்க்க. தூய்மை - பரிசுத்தம். இன்னா - கடும். நோற்கிற்பவர் - பொறுப்பவர்.
நல்வழியைக்கடந்தவரின் வாயிலிருந்து பிறக்குங் கடுஞ்சொல்லைப்பொறுப்பவர் துறந்தவரைப்பார்க்கினுந் தூய்மையுடையவராவார்.

160. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
மின்னாச் சொனோற்பாரிற் பின்.

நோற்பார் - பொறுப்பார்.
பிறர்சொல்லுங் கடுஞ்சொல்லைப் பொறுப்பவர் சாப்பிடாமல் தவஞ் செய்கிறவர்களிலும் பெரியவராவார்.



KURAL I. 3

அறத்துப்பால்.

## 17. அழுக்காறாமை.

161. ஒழுக்காறாக்கொள்க வொருவன்றன்னெஞ்சத்
தழுக்காறிலாத வியல்பு.

அழுக்காறு - பொறாமை.
ஒருவன் தன்மனதில் பொறாமையில்லாத தன்மையை ஒழுக்கத்தின் வழியாகக் கொள்ளக்கடவான்.

162. விழுப்பேற்றினஃதொப்பதில்லை யார்மாட்டு மழுக்காற்றினன்மை பெறின்.

உ

விழுப்பேற்றின் - சிறந்தபேறுகளுள். ஆற்றின் - றும். அனமை - ஆல்லாததன்மையை.

நின்

யாவரிடத்திலும் பொறாமையற்றிருக்குகலை ஒருவன் பெறு வானுனல் சிறந்த பேறுகளுள் அதற்கு ஒப்பானது இல்லை.

163. அறனுக்கம் வேண்டாதானென்பான் பேறுதழுக்கறுப்பான்.

பிறனுக்கம்

ந.

பேணுது - பாதுகாக்காமல்.

பிறன் செல்வத்தைப் பாதுகாக்காமல்

பொறுமைப்படுப வன் தர்மமுஞ்செல்வமுந் தனக்குவேண்டியதில்லை எனபான்.

164. அழுக்காற்றினல்லவை செய்யாரிழுக்காற்றி னேதம் படுபாக்கறிந்து.

சு

இழுக்காற்றின் - தீயவழியால். ஏதம் - படுபாக்கு - உண்டாக.

துன்பம்.

அறிவுண்டயோர் தீயவழியில் குற்றமுண்டாவதை அ றிந்து பொருமையினல் தகாதவைகளைச் செய்யார்.

165. அழுக்கா றுடையார்க்கது சாலுமொன்னர் வழுக்கியுங் கேடீன்பது.

௫

சாலும் - போதும், ஒன்னர் - பகைஞர். வழுக்கி யும - மறநதும.

பொருமையுடையவர்க்கு அதுபோதும். பகைவர் லும் அதினுல் அவர்களுககுக் கேடுண்டாகும்.

மறந்தா அறத்துபபால, ௯௫

166. கொடுப்பதழுக்க றுப்பான் சுற்ற முடுப்ப தூஉ முண்ப தூஉ மின் றிக் கெடும்.

மற்றவர்களுக்குக் கொடுக்கப்படுவதைப்பற்றிப் க மைப்படுபவனின் பந்துக்கள் உடுப்பதும் உண்பதும்

பொரு இன் றிக் கெடுவார்கள்.

167. அவ்வித்தழுக்கா றுடையானைச் செய்யவ டவ்வையைக் காட்டி விடும்.

ள

அவ்வித்து - பொறாமைப்பட்டு. செய்யவள் - இலட்சுமி. தவ்வை - மூத்தசகோதரி.

பொறாமையுடையவனை இலட்சுமி பொறுக்காமல் அவனை மூதேவிக்குக் காட்டிவிடுவாள்.

168. அழுக்காறெனை வொருபாவி திருச்செற்றுத் தீயுழி யுய்த்து விடும்.

அ

திரு - செல்வம். செற்று - கெடுத்து. தீயுழி - ஙிடத்தில்., உய்த்துவிடும் - செலுத்திவிடும்.

தீயி

பொறாமை என்னும் ஒருபாவி செல்வத்தைக்கெடுத்து கத்தில் செலுத்திவிடுவான.

நர

169. அவ்விய நெஞ்சத்தானுக்கமுஞ் செவ்வியான் கேடு நினைக்கப்படும்.

சு

அவ்வியம் - பொறாமை. செவ்வியான் - நடுவு நிலை மையுடையவன.

பொறாமையுள்ள மனமுடையவனின் செல்வமும் நிலைமையுடையவனின் கேடும் நினைக்கப்படும்.

நடுவு

170. அழுக்கற்ற கன்றாருமில்லை யஃதிலார்
பெருக்கத்திற்றீர்ந்தாருமில்.

ம

அகன்றார் - பெருகினவர். இலார் - இல்லாதவர்.
தாரும் - நீங்கினவரும்.

தீர்ந்
பொறாமைப்பட்டுப் பெருகினவருமில்லை;
கிப் பெருக்கத்திலிருந்து நீங்கினவருமில்லை.



அதில்லாதவரா

8



## 18. வெஃகாமை.

171.

நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமுமாங்கே தரும். க

நடுவு - நடுவுநிலைமை. வெஃகில் - விரும்பினால்.
பொன்றி - கெட்டு. ஆங்கு - அப்போது.

நடுவுநிலைமை யில்லாதவனாகி நல்லபொருளை ஒருவன் இச்சித்தால் அது குடிகெடுத்து அப்போதே குற்றத்தையுந் தரும்.

172. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணுபவர்.

உ

படும் - உண்டாகும். படுவ - உண்டாகிற.

நாணுப

வர் - அஞ்சுபவர்.

நடுவு நிலைமையல்லாததற்கு அஞ்சுகிறவர்கள் வரும் பிரயோசனத்தை விரும்பிப் பழியுண்டாகுஞ் செய்கைகளைச் செய்யமாட்டார்கள்.

173. சிற்றின்பம் வெஃகியறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டுபவர்.

ந

பரம இன்பத்தை விரும்புகிறவர் சிற்றின்பத்தை அதர்மமானவைகளைச் செய்யமாட்டார்.

ஆசித்து

174. இலமென்று வெஃகுதல் செய்யார்
புன்மையில் காட்சியவர்.

புலம்வென்ற

ச

இலம் - இல்லாதவர்களாயிருக் கிறோம். புன்மை -

அற்

பம். காட்சியவர் - அறிவையுடையவர்.

ஐம்புலன்களையும் வென்ற தெளிவான
அறிவையுடையவர் நாம் வறியோமென் றுநினைத்து (பொருளை) விரும்பமாட்டார்

175. அஃகியகன்ற வறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

அஃகி - நுட்பமாகி. வெறிய - வெறுக்கத்தக்க.
யாவரிடத்திலும் (பொருளை)
வைகளைச் செய்தால் நுட்பமும்
என்ன ஆகும்.
விரும்பி வெறுக்கத்தக்க
விரிவுமுள்ள அறிவினால் அறத்துப்பால்.

176. அருள்வெஃகியாற்றின் கணின்றான் பொருள்
பொல்லாத சூழக் கெடும். [வெஃகிப் சூ

ஆற்றின்கண் - நல்லவழியில். சூழ - நினைக்க.

அருளைவிரும்பி நல்வழியில் நின்றவன் பொருளை இச்சித்துப்பொல்லாதவைகளை நினைத்தால் கெட்டுப்போவான்.

177. வேண்டற்க வெஃகி யாமாக்கம் விளைவயின்
மாண்டற்கரிதாம் பயன்.

விளைவயின் - விளையுங்காலத்தில். மாண்டற்கு - மாட்சிமைப்படுவதற்கு.

இச்சித்தலால் உண்டாகுஞ் செல்வத்தை விரும்பாதே. அதின் பயன் விளையுமாகில் நன்றாகாது.

178. அஃகாமை

செல்வத்திற்கியாதெனின்வெஃகாமை
வே ண் டும் பிறன் கைப்பொருள் .
அ
அஃகாமை - குறையாமை.
செல்வத்திற்குக் குறையாமை யாதென்றால் பிறன் பொருளை இச்சியாதிருத்தலாம்.

கைப் 179.

அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச்சேருந்
திறனறிந்தாங்கேதிரு.

திறன் - சமயம். திரு - லெட்சுமி.
தர்மத்தையறிந்து
வரை இலட்சுமி நல்ல

(பொருளை) இச்சியாத அறிவுடைய
சமயம்பார்த்து அங்கே சேருவாள் 180. இற

லீனுமெண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக் கு .
ம்

இறல் - அழிவு. விறல் - வெற்றி.
(பின்வருவதை) எண்ணாமல் பொருளை விரும்பினால் அழிவைத்தரும். வேண்டாமை என்னும் பெருமை வெ
யைத்தரும்.
அது
ற்றி

அறத்துப்பால்.

## 19 புறங்கூறாமை.

181. அறங்கூறானல்ல செயினு மொருவன்
புறங்கூறானென்றலினிது.

கூறான் - சொல்லாதவன். அல்ல - அறமில்லாதவை.

ஒருவன் தர்மத்தைப்பற்றிச் சொல்லாதவனுகிப் பாவமானவைகளைச் செய்தாலும் இவன் புறங்கூறாதவனென்று சொல்லப்படுதல் இனிமையாகும்.

182. அறனழீஇ யல்லவை செய்தலிற்றீதே
புறனழீஇப்பொய்த்து நகை.

உ

(அழீஇ, அழித்து). புறன் - புறத்திலுள்ளவன்.

தர்மத்தை அழித்து அதர்மமானவைகளைச் செய்தலைப் பார்க்கிலும் பின்னால் இகழ்ந்து முன்னால் தல் தீமையுடையதாம்.

பொய்யாய் மகிழ் 183. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்க ந்தரும்.

ரு

பின்னால் புறங்கூறி முன்னே புகழ்ந்து உயிர்வாழ்வதிலுஞ் சாகிறது தர்மநூல் சொல்லும் பயனைத் தரும்.

184.
கண்ணின்று கண்ணறச்சொல்லினுஞ்சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்.

ச

கண்ணற - கண்ணோட்டமற. (முன்னின்று - இன்று.)

முன்,
பிறனுக்கு எதிரில் நின்று தாட்சணியமில்லாமல் பேசினாலும் அவன் இல்லாதவிடத்தில் பிற்பாடு குற்றம் விளையுஞ் சொற்களைச் சொல்லாதே.

185. அறஞ்சொல்லுநெஞ்சத்தானன்மை
புறஞ்சொல்
புன்மையாற் காணப்படும். [லும்
ரு

புன்மை - இழிவு.
றத்தைச்சொல்லும் நெஞ்சத்தானல்லாமை
இழிவினால் காணப்படும்.

புறங்கூறும்
அறத்துப்பால் கக

186. பிறன்பழிகூறுவான் றன்பழியுள்ளுந்
திறன்றெரிந்து கூறப்படும்.

கூ

பழி - குற்றம்.
பிறனுடைய குற்றத்தைச் சொல்லுகிறவனின் குற்றங்களிலுள்ள பலமானவைகள் ஆராய்ந்து சொல்லப்படும்.

187. பகச்சொல்லிக்கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
ந ட்பாடறேற்றாதவர் .

எ

பக - பகையானவைகளை. கேளிர் - பந்துக்கள்.

நட்

பாடல் - சிநேகித்தல். தேற்ருதவர் - அறியாதவர்.

மகிழும்படிசொல்லிச் சிநேகஞ்செய்ய அறியாதவர் புறங் கூறிச் சுற்றத்தாரைப் பிரிப்பார்கள்.

188. துன்னியார் குற்றமுந் தூற்று மரபினு
ரென்னை கொலேதிலார்மாட்டு

அ

துன்னியார் - பந்துக்கள். மரபினுர் - யுடையவர். ஏதிலார் - அந்நியர்.

இயல்பினை

பந்துக் களின் குற்றத்தையுந் தூற்று ந் தன்மையயுடைய வர் அந்நியரிடத்தில் என்னதான் செய்யார்கள்.

189. அறனேக்கியாற்றுங்கொல்வையம்
புன்சொ லுரைப்பான் பொறை.

புறனேக்கிப்

ஃ

ஆற்றும் - சுமக்கும். பொறை - பாரம்.

ஒருவனுக்குப் பின்னல் அவன் குற்றங்களைச் சொல்லுகிற வனின் பாரத்தைப் பூமி தர்மம் நோக்கியா சுமக்கும்.

190.

எதிலார் குற்றம்போற்றங்குற்றங்காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னுமுயிர்க்கு. ம

அந்நியர் குற்றங்களைப்போல் தமது குற்றத்தையுங்
யாராணல் நிலைபெற்ற உயிர்க்குத் தீதுமுண்டா.

காண்





## 20. பயனில சொல்லாமை.

191. பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாருமெள்ளப்படும்.

முனிய - வெறுக்க. எள்ளப்படும் - இகழப்படும்.

க

பலரும் வெறுக்கப் பிரயோசனமற்றவைகளைச்
வன் யாவராலும் இகழப்படுவான்.

சொல்ப

192. பயனில பல்லார் முற்சொல்லனயனில
நட்டார்கட் செய்தலிற்றீது.

உ

இல - இல்லாதவைகளை. நட்டார் - உறவோர்.
பலர்முன் பயனற்றவைகளைச் சொல்லுவது

நயனற்றவை களைச் சிநேகிதரிடத்தில் செய்வதிலுங் கெட்டது. 193. நயனிலனென்பது சொல்லும் பயனில
பாரித்துரைக்கு முரை.
ந
பாரித்து - விரித்து.
பயனில்லாதவைகளை விரித்துப் பேசுதல் இவன் நன்மை பற்றவனென்பதைக்காட்டும்.

194. நயன்சாரா நன்மையினீக்கும் பயன்சாராப்
பண்பில் சொற்பல்லாரகத்து.

ச
நயன் - இன்பம். சாரா - சேராதவை.
பிரயோசனத்தோடு சேராததும்
பண்பில்லாததுமான சொற்கள் பலருக்கும்
நின்று நீங்கும்.
பிரியத்தைக்கொடாமல் நன்மையி

195. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மையுடையார் சொலின்
ரு
சீர்மை - புகழ் நீர்மை - சற்குணம்.
சற்குணர் பிரயோசனமற்றவைகளைச் சொன்னால் களின் நன்மை சிறப்போடு நீங்கிப்போகும்.

அவர்
அறத்துப்பால். சக

196. பயனில் சொற் பாராட்டுவானை மகனெனல்

மக்கட்பதடியெனல்.

கூ

பாராட்டுவான் - புகழ்ந்துசொல்பவன். பதடி - பதர்.

பயனற்ற சொற்களைப் புகழ்ந்துசொல்பவனை மனிதன் என்னாதே; மக்களில் பதர் என்று சொல்லு.

197. நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று.

சான்றோர் இன்பமற்ற சொற்களைச் சொன்னாலும், சொல்லட்டும். பயனற்றவைகளைச் சொல்லாமை நல்லது.

198. அரும்பயனாயுமறிவினார் சொல்லார்
பெரும் பயனில்லாத சொல்

ஆயும் - ஆராயும். அறிவினார் - அறிவையுடையவர். அருமையான பிரயோசனங்களை ஆராயும் அறிவுடையார் பெரும் பிரயோசனமில்லாத சொற்களைச்சொல்லமாட்டார்.

199

பொருடீர்ந்தபொச்சாந்துஞ்சொல்லார்மருடீர்ந்த
மாசறுகாட்சியவர். கூ

பொச்சாந்தும் - மறந்தும். மருள் - மயக்கம்

மயக்கம் நீங்கிய குற்றமற்ற அறிவுடையவர் மறந்தும் னற்றவைகளைச் சொல்லார்.
பய

200. சொல்லுக சொல்லிற் பயனுடைய
சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

ஙி

சொன்னல் பயனுடைய சொற்களைச் சொல்லககடவன் சொற்களிற் பயனில்லாத சொற்களைச் சொல்லாதிருக்கக்கடவான்.



அறத்துபபால.

## 21. தீவினையச்சம்.

201. தீவினையாரஞ்சார் விழுமியாரஞ்சுவர்
தீவினையென்னுஞ் செருக்கு.

விழுமியார் - சிறப்புடையவர். செருக்கு - அகங்காரம்.

தீவினை என்னும் அகங்காரத்திற்குத்
அஞ்சார். சிறப்புடையவர் அஞ்சுவார்.

தீவினையுடையவர்

202. தியவைதீய பயத்தலாற் றீயவை
தீயினுமஞ்சப்படும்.

உ

பயத்தலால் - தருதலால்.

தீவினைகள் துன்பத்தைத் தருவதினல் அத்தியவைகளுக் குத் தீயைப்பார்க்கிலும் பயப்படவேண்டும்.

203. அறிவினுளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யாவிடல்.

ற

செறுவார் - பகைஞர்.

பகைஞருக்குந் தீயவைகளைச் செய்யாதிருத்தலை அறிவுகள் எல்லாவற்றிலும் முதன்மை என்பார்கள்.

204. மறந்தும் பிறன் கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

சு

சூழற்க - எண்ணுதிருக்கக்கடவன்.

மறந்தும் பிறன்கேட்டை எண்ணு திருக்கக்கடவன். அதை எண்ணிஞல் அறக்கடவுள் எண்ணினவனுக்குக் கெடுதியை எண்ணுவான்.

205. இலனென்று தீயவை செய்யற்க செய்யி
னிலனுகுமற்றும் பெயர்த்து.

ரு

பெயர்த்து - மறுபடியும்.

ஒருவன் தான் தரித்திரனென்று நினைத்துத் தீயவைகளைச் செய்யாதிருக்கக்கடவன். செய்தால் மறுபடியும் அதிகத்தரித் திரனுவான்.

அறதஅபபாலை.
சுஅ

206. தீப்பாலதானபிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல் வேண்டாதான்.

ள

பால - தன்மையுடையன. அடல் - வருத்தம்.

துன்பஞ் செய்யுந தன்மையையுடையவைகள் தன்னை

வருத்தப்படுத்தலை விரும்பாதவன் தீயதன்மையையுடைய வைகளைப் பிறருக்குச் செய்யாதிருக்கக்கடவான்.

207. எனைப்பகையுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென்றடும்.

எ

எனை - எவ்வளவு. உய்வர் - பிழைப்பர்.
வீயாது - நீங்காமல். அடும் - கொல்லும்.

எவ்வளவு பெரிய பகைவரிருந்தாலுந் தப்புவார். தீவினையாகிய பகை நீங்காமல் பின்சென்று கொல்லும்.

208. தீயவைசெய்தார் கெடுதனிழறன்னை
வீயாதடி யுறைந்தற்று.

அ

உறைந்தற்று – தொடர்ந்தால்போலும்.

தீயவைகளைச் செய்தவர்களின் கெடுதல் நிழல் தன்னை விடாமல் தன் அடியினிடத்தில் தங்கியதை யொக்கும்

209.

தன்னைத்தான் காதலனாயினெனைத் தொன்றுந்
துன்னற்க தீவினைப்பால். கூ

காதலன்-சிநேகிக்கிறவன். துன்னற்க-செய்யாதுவிடுக.

ஒருவன் தன்னைத் தான் சிநேகித்தால் தீவினைத் தன்மையுடையதை எவ்வளவாகிலுஞ் செய்யாதிருக்கக்கடவான்.

210. அருங்கேட னென்பதறிக மருங்கோடித்
தீவினை செய்யானெனின்.

அருங்கேடன் - கேட்டை அரிதாக வுடையவன்.
மருவகு - பக்கம்.

ஒருவன் கெட்டவழியில் சென்று தீவினை செய்யாதிருப்பானுனல் அவன் அரிதாகிய கேடில்லாதவனென்பதையறியக்கடவான்.





## 22. ஒப்புரவறிதல்.

*211. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு.

க

கடப்பாடு - உபகாரம். ஆற்றும் - செய்யும்.
உபகாரம் பிரதி உபகாரத்தை விரும்பாது; உலகம் மேகத்துக்கு என்னப்பிரதி உபகாரஞ் செய்யும்.

212. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. உ

தாள் - முயற்சி. தந்த - சம்பாதித்த. வேளாண்மை- உபகாரம்.

ஒருவன் முயற்சிசெய்து சம்பாதித்துவைத்த பொருளெல் லாந் தகுந்தவர்க்கு உபகாரஞ் செய்யும்படிக்குத்தான்.

213. புத்தேளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற.

ரு

தேவர் உலகத்திலும் இவ்வுலகத்திலும் உபகாரம்போல் நல்லவையாகிய வேறு செயல்களைப் பெறுவதரிதாம்.

214. ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப்படும்.

ச

ஒத்தது - உலகநடை

உலகநடையையறிந்து செய்பவன் உயிரோடு கூடிவாழ்பவனாவான். மற்றவர்கள் செத்தவர்களுள் வைக்கப்படுவார்கள். 215 [redacted] ஊருணி நீர்நிறைந்தற்றே
யுலகவாம்
பேரறிவாளன் திரு.

ரு

ஊருணி - ஊரார் ஜலமுண்ணுங் குளம்.

அவாம்
விரும்பும்.

உலக நடையை விரும்பிச் செய்யும் பெரிய அறிவையுடை யவனின் செல்வம் ஊருணி நீர் நிறைந்தது போலும். அறத்துப்பால். சரு

தி

216. பயன் மரமுள்ளூர்ப் பழுத்தற்றாற்செல்வ
நயனுடையான்கட் படின்.

சா

படின் - உண்டானால். (ஆல், அசைநிலை).

செல்வம் உபகாரஞ்செய்பவனிடத்திலுண்டானால் அது பலன் கொடுக்கும் மரம் ஊர்நடுவே பழுத்ததுபோலாகும்.

217. மருந்தாகித்தப்பா மரத்தற்றாற்செல்வம்
பெருந்தகையான் கட் படின்.

எ

தகையான் - தன்மையையுடையவன்.

செல்வம் பெருந்தன்மையுடையவனிடத்தில் உண்டானால் தப்பாமல் மருந்துக்கு உபயோகப்படுகிறமரத்தைப்போலாகும.

218. இடனில் பருவத்து மொப்புரவிற்கொல்கார்
கடனறி காட்சியவர்.

அ

ஒல்கார் - தளரார்.

தாம் செய்யவேண்டிய கடமையை யறிந்த விவேகிகள் செல்வமற்ற காலத்திலும் உபகாரஞ் செய்கிறதற்குத் தளரார்.

219. நயனுடையா னல்கூர்ந்தானுதல் செயுநீர்மை
செய்யாதமைகலா வாறு.

சு

நல்கூர்ந்தான் - வறுமைப்பட்டவன். அமைகலா - சம்

மதியாத.

உபகாரஞ் செய்கிறவன் செய்யவேண்டிய தர்மங்களைச்

வறுமைப்பட்டவனுதல் தான்
செய்யக்கூடாமையினுல்தான்.

220. ஒப்புரவினுல் வருங்கேடெனினஃதொருவன்
விற்றுக்கோட் டக்கதுடைத்து.

ம

கோட்டக்கது (கோள், தக்கது ) -

வாங்குந்தன்மை
யையுடையது..

உபகாரஞ் செய்தலினுல்கேடுவருமெனமுலஒருவன தன்னை விற்ருயினும் அதைக் கொள்ளத்தக்க தன்மையுடையதாம்.





## 23. ஈகை.

221. வறியார்க்கொன்றீவதே யீகைமற்றெல்லாங்
குறி யெதிர்ப்பை நீரதுடைத்து. க

குறி - குறித்த. எதிர்ப்பை - பதிலுக்குப்பதில்.

ஏழைகளுக்குக் கொடுப்பதுதான் ஈவு. மற்றதெல்லாம் பதிற்பலனை விரும்புந் தன்மையை யுடையது.

222. நல்லாறெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று. உ

நல்லவழி என்றுலும் இரத்தல் தீமை, மேலுலகம் யென்றுலும் ஈதல் நல்லது.

இல்லை

223. இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணேயுள.

கூ,

எவ்வம் - இழிவு.
நான் ஏழையென்னும் இழிவுசொல் சொல்லாமையும்
ஈதலும் நற்குடியில் பிறந்தவனிடத்தில் உண்டு.

224. இன்னாதிரக்கப்படுத லிரந்தவ
ரின்முகங் காணுமளவு.

கூ

இன்னாது - இனிதாகாது.
யாசகரது இனியமுகத்தைக்காணும்மட்டும்
இரக்கப்படுதல் இனிமையாகாது.

225. ஆற்றுவாராற்றல் பசியாற்றலப்பசியை
மாற்றுவாராற்றலிற் பின்

கூ

தவஞ் செய்பவரின் வல்லமை
பசியைப்பொறுத்தலாம். அதைப்பார்க்க அப்பசியை
மாற்றுவாரின் வல்லமைபெரியது. அறத்துப்பால்.

சுஎ

226. அற்றாரழி பசி தீர்த்தலஃதொருவன்
பெற்றான் பொருள் வைப்புழி.

கூ

அற்றார் - தரித்திரர். அழி - அழியும். உழி - இடம்

தரித்திரரின் மிகுந்த பசியைத் தீர்த்தல் ஒருவன் அதை வைக்கும் இடமாம்.

பொருளைப்பெற்ற

227. பாத்தூண்மரீஇ

யவனைப்பசியென்னுந்
தீப்பிணி தீண்டலரிது.

மரீஇ (மருவி) - பழகி. தீண்டல் - தொடுதல்.

பகுத்து உண்ணுதலில் பழகியவனைப்பசியென்னுந் தீப்பிணி தொடுதல் அரிதாகும்.

228. ஈத்துவக்கு மின்பமறியார் கொலுமுடைமை
வைத்திழக்கும் வன்கணவர்.

உவக்கும்-மகிழும். (கொலுமுடைமை-கொல், டைமை.)

தாமு

தமது பொருளை ஏழைகளுக்குக் கொடாமல் வைத்து இழக்கும் அருளில்லாதவர்கள் கொடுத்தலின் மகிழ்ச்சியை யறியார்களோ.

229. இரத்தலினின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியருணல்.

மன்ற - நிச்சயம். தமியர் - தனதது.

(பொருளின் குறைவை) நிறைவாக்கும்படி தாம்

தனித்திருந்து சாப்பிடுதல் நிச்சயமாகவே இரத்தலினுங் கெட்டது.

230. சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீதலியையாக் கடை.

ம

இயையா - இசையாத.

சாவைப்போல் இனிமையில்லாததொன்றுமில்லை. அதுவும் யாசகருக்குக் கொடுக்கக் கூடாதகாலத்தில் இனிமையாகும்



சஅ அறத்துப்பால.

## 24. புகழ்.

231. ஈதலிசைபட வாழ்தலதுவல்ல
தூதியமில்லை யுயிர்க்கு.

ஊதியம் - இலாபம்.

ஈதலினால் புகழுண்டாக வாழக்கடவாய். உயிர்க்கு வேறு பலனில்லை.

அதையன்றி

232.

உரைப்பாருரைப்பவை யெல்லாமிரப்பார்க்கொன்
றீவார் மேனிற்கும் புகழ் உ

சொல்லுகிறவர்களால் சொல்லப்படுகிறதெல்லாம் பவர்க்கு ஒன்றைக் கொடுப்பார் மேல் நிற்கும் புகழாம்.

இரப் 233. ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன்றில்.

ரு

ஒன்றா - ஒப்பில்லாத. பொன்றாது - அழியாது.

ஒப்பற்ற உயர்ந்த புகழையல்லாமல் உலகத்திலே அழியாமல் நிற்பது வேறொன்றுமில்லை.

அழியா 234. நிலவரை நீள்புகழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தேளுலகு.

ச

நில - நிலம். வரை - எல்லை.

ஒருவன் பூமியின் எல்லையில் அழியாமல் நிற்கும் புகழை அடைவானானால் தேவலோகம் தன்னிடத்தில் வந்திருக்கிற ஞானிகளைத் துதியாது.

235. நத்தம்போற் கேடுமுளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க்கல்லாலரிது.

ரு

நத்தம் - பெருக்கம். சாக்காடு - மரணம். வித்தகர் ஞானிகள்.

ஞானிகளுக்கல்லாமல் மற்றவர்களுக்குக்கேடும் பெருக்கத்தைப்போல் உண்டாகுதல் அரிதாகும்.

மரணமும்

அறத்துப்பால். 

236. தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

தோன்றினால் புகழோடு தோன்றக் கடவான். அதில்லாதவர்கள் தோன்றலிலுந் தோன்றாமை நல்லது.

237. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவதெவன்

நோவார் - நோவாதவராகி.

புகழ்பட வாழாதவர்கள் தங்களை நோவாதவராகித் தம்மை இகழ்பவரை நோவது என்.

238. வசையென்ப வையத்தார்க்கெல்லா மிசையென்னு
மெச்சம் பெறாஅவிடின்.

வசை - பழிப்பு.

புகழ்ச்சி என்னும் பிள்ளையைப் பெறாவிட்டால் வையத்தார்க்கெல்லாம் அது நிந்தையாகும் என்று சொல்லுவார்கள்.

239. வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

வண் - வளம். யாக்கை — உடம்பு.

புகழில்லாத உடம்பைச்சுமந்த பூமியில் பழிப்பற்ற
மையுள்ள விளைவு குறையும்.

வள

240. வசையொழியவாழ்வாரே
வாழ்வாரிசையொழிய
வாழ்வாரே வாழாதவர்.

ம

நிந்தை யில்லாமல் வாழ்பவர்கள் தான் வாழ்பவர்கள்.
ழின்றிவாழுகிறவர் வாழாதவர்.

புக



KURAL I. 4

அறத்துப்பால்.

## 25. அருளுடைமை.

241. அருட்செல்வஞ் செல்வத்துட்
பூரியார் கண்ணுமுள.

செல்வம்பொருட்
[செல்வம் க

பூரியார் - கீழ்மக்கள்.
அருளாகிய செல்வம் செல்வங்களுக்குள் செல்வம
ாம்; பொருளாகிய செல்வங் கீழ்மக்களிடத்திலுமுண்டு.

242. நல்லாற்ருனுடி யருளாள்க பல்லாற்ருற்
றேரினுமஃதே துணை.

உ
நல்லவழியில் நின்று அருளுடையவராகக்கடவார். பல சமயநூற்களை ஆராய்ந்து பார்த்தாலும் அதுதான் துணையாகும்.

243.

அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கில்லையிருள்சேர்ந்த
வின்னா வுலகம் புகல். ௩

இன்னா - துன்பம்.
இருள்சேர்ந்த துன்ப உலகம் புகுதல் அருள் நெஞ்சை யுடையவர்க்கு இல்லை.

சேர்ந்த
244. மன்னுயிரோம்பி
யருளாள்வாற்கில்லென்ப
தன்னுயிரஞ்சும் வினை.
ச

ஓம்பி - காப்பாற்றி.
மன்னுயிர்களைக்காப்பாற்றி (அவைகளிடத்தில்) கிருபை யுள்ளவனாயிருப்பவனுக்குத் தன்னுயிர் அஞ்சும் என்பார்கள்.

பாவமில்லை

245. அல்லலருளாள்வார்க்கில்லை வளிவழங்கு
மல்லன் மா ஞாலங் கரி.

ரு

அல்லல் - துன்பம். வளி - காற்று. மல்லல் -
பம்.

வளப்

அருளுடையவர்க்குத் துன்பமில்லை. காற்று
வளப்பமுள்ள பெரிய பூமி அதற்குச்சாட்சி.

உலாவுகிற

அறத்துப்பால.

246.

பொருணீங்கிப் பொய்ச்சாந்தாரென்பாருணீங்கி
யல்லவைசெய் தொழுகுவார். சு

பொய்ச்சாந்தார் - மறந்தார்.

அருளின்றித் தீயவைகளைச்செய்து நடப்பவர்
உறுதிப்பொருளை நீங்கி அதை மறந்துபோனவரென்பார்.

247. அருளில்லார்க் கவ்வுலகமில்லை
இவ்வுலக மில்லாதியாங்கு.

பொருளில்லார்க்

எ

இல்லாதியாங்கு - இல்லாததுபோல்.

ஆஸ்தியில்லாதவர்களுக்கு இவ்வுலகமில்லாததுபோல் ளில்லாதவர்க்கு அவ்வுலகம் இல்லை.

அரு

248. பொருளற்றார் பூப்பரொருகாலருளற்று ரற்றார் மற்றாதலரிது.

அ

பூப்பர் - செம்மைப்படுவர்.

ஆஸ்தியில்லாதவர்கள் ஒருகாலத்தில் செம்மைப்படுவார். அருளற்றவர் அழிந்தவராவார். அவர்கள் பினனல் சீர்படுவ தரிது.

249. தெருளாதான் மெய்ப்பொருள் னருளாதான் செய்யுமறம்.

கண்டற்றற்றேரி

க

தெருளாதான்-ஞானமில்லாதவன். தேரின் - ஆராய் தால்.

ச்

அருளற்றவன் செய்யும் அறத்தை ஆராய்ந்தால் லாதவன் மெய்ப்பொருளைக் கண்டதுபோலாம்.

ஞானமில்

250. வலியார் முற்றன்னை நினைக்கதான் றன்னின் மெலியார் மேற்செல்லுமிடத்து.

ம

ஒருவன் தன்னைப்பார்க்கிலும் ஏழைகளை போகும்போது வலியவன் முன்னிற்கத் தன்னை

வருந்தும்படி
நினைக்கக்கடவான்.



4

அறத்துப்பால.

## 26. புலான்மறுத்தல்.

251. தன்னூன் பெருக்கற்குத் தான்
பிறிதூனுண்பா
னெங்ஙன மாளுமருள்.

க

ஊன் - உடம்பு. எங்ஙனம் - எப்படி.
தன் உடம்புபெருக்கும்படிக்கு மற்றொன்றின் உடலை
பவன் எப்படிக் கிருபையுடையவனாவான்.

உண்

252. பொருளாட்சி போற்றாதார்க்கில்லை
யாங்கில்லை யூன்றின்பவர்க்கு.

யருளாட்சி

உ

ஆட்சி - உரிமை. போற்றாதார் - பாதுகாக்காதவர்.
பொருளுரிமை காப்பாற்றாதவர்க்கில்லை. அதுபோல்
அருள் பயன் ஊன் தின்பவர்க்கு இல்லை.

253. படைகொண்டார் நெஞ்சம்
போனன்றூக்காதொ
னுடல்சுவை யுண்டார் மனம். [ன்ற ந
படை - வாளாயுதம். ஊக்காது - மேற்கொள்ளாது.

ஓர்உயிரின்உடலைச் சுவைப்பட
உண்டவரின்நெஞ்சுவாளாயுதத்தைக் கையிற் கொண்டவர் மனம்போல் நன்மையை விரும்பாது.

254. அருளல்லதியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்.

௪

கோறல் - கொல்லல்.
அருள் யாதெனில் கொல்லாமையாம்.
அருளில்லாமை என்னவென்றால் கொல்லுதலாம்;
கொன்றவூனைத்தின்னுதல் அதாமம.

255. உண்ணாமையுள்ளதுயிர் நிலை யூனுண்ண
ண்ணாத்தல் செய்யாதளறு.

௫

அண்ணாத்தல் - வாய்திறத்தல். அளறு - நரகம்.
(ஊனைச்) சாப்பிடக்கூடாதது உயிர்நின்றஉடம்பு.
ஊனைச்
சாப்பிட்டால அவனை நரகம் வாய்திறந்து உமியாது.

அறத்துப்பால் ௮௫

256.

தினற்பொருட்டாற்கொள்ளாதுலகெனின்யாரும்
விலைப்பொருட்டாலூன் றருவாரில். ௬

உலகம் ஊனைத்தின்னும் பொருட்டுக் கொள்ளாவிட்டால் விலைபபடும் பொருட்டு ஊனை விற்பாரில்லை.

257. உண்ணாமை வேண்டும் புலாஅல்
புண்ணது உணர்வார்ப் பெறின்.

பிறிதொன்றன்

புலால் - இறைச்சி. பிறிது - வேறு.

புலால் மற்றொன்றின் புண் என்று உணர்வாரைப் பெற்றால் அதைச்சாப்பிடாதிருக்கவேண்டும்.

258. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரிற் றலைப் பிரிந்த ஊன்.

செயிர் - மயக்கம். தலைப்பிரிந்த - நீங்கின. காட்சி யார் - ஞானிகள்.

மயக்கத்தினின்று நீங்கின ஞானிகள் ஓர் உயிரினின்று நீங்கி வந்த ஊனைத்தின்னார்கள்.

259. அவிசொரிந்தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர் செகுத்துண்ணாமை நன்று.

அவி - நெய். வேட்டல்-யாகம். செகுத்து - கொன்று.

நெய்யை ஊற்றி ஆயிரம் யாகஞ் செய்தலினும் ஒன்றின் உயிரைப்போக்கி உண்ணாமை நல்லது.

260. கொல்லான் புலாலை மறுத்தானைக்கைகூப்பி
எல்லா வுயிருந் தொழும்.

கொல்லான் - கொல்லாதவன்.

எந்த உயிரையுங் கொல்லாதவனைப் புலாலை வனை எல்லாவுயிருங் கைகுவித்துத்தொழும்.

உண்ணாத



புற அறத்துப்பால்

## 27. தவம்.

261.

உற்றநோய் நோன்றலுயிர்க்குறுகணஞ்செய்யாமை யற்றே தவத்திற்குரு. க

உற்ற - உண்டான. நோன்றல் - சுமத்தல். உறு

கண் - துன்பம். அற்றே - அதே. உரு - வடிவு.

உண்டான நோவைப்பொறுத்தலும் உயிர்க்குத்துன்பஞ் செய்யாமையுமாகிய அதே தவத்திற்கு வடிவம்.

262. தவமுந் தவமுடையார்க் காகுமவமதனை யஃதிலார் மேற்கொள்வது.

உ

அவம் - வீண்.

தவமுந் தவத்தையுடையவர்க்கு ஆகும்; அது அதைச்செய்வது வீணாகும்.

இல்லாதவர்

263. துறந்தார்க்குத்

துப்புரவுவேண்டிமறந்தார்கொன்
மற்றையவர்கட வம்.
௩

துப்புரவு - உதவி. (கடவம்: கள், தவம்.)

இல்லறத்தார் துறந்தாருக்கு உதவிசெய்ய விரும்பித் தவத்தின் பெலனை மறந்தாரோ.

264. ஒன்னார்த்தெறலுமுவந்தாரை யாக்கலு
மெண்ணனிற் றவத்தான் வரும்.
௪

ஒன்னார் - பகைஞர். தெறல் – அழித்தல். உவந்தார் விரும்பினவர்.

எண்ணிப்பார்த்தால் பகைஞரை அழித்தலுஞ் சிநேகிதரை உயர்த்தலுந் தவத்தால் உண்டாகும்.

265. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற்செய்தவ
மீண்டுமுயலப்படும்.
௫

ஆங்கு - படியே.

வேண்டியவைகளை வேண்டியபடியே பெறுதலால் செய்யுந் தவம் இங்கேயும் முயற்சிசெய்யப்படும்.

அறத்துப்பால். ௯௰

266.

தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற்றல்லா
ரவஞ் செய்வாராசையுட் பட்டு. ௬

தவஞ்செய்கிறவர்கள் தங்கள் கருமத்தைச் செய்கிறவர்களாவார். மற்றவர்கள் ஆசையுள்பட்டு வீண்கருமஞ்செய்பவராவார்.

267. சுடச்சுடப் பொன்போலொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற்பவர்க் கு .

எ

புடமிடப்புடமிடப்பொன் ஒளிவிடுவதுபோல் துன்பஞ் சுடச்சுட அது தவஞ்செய்பவர்களுக்குப் பிரகாசிக்கும்.

268. தன்னுயிர் தானறப்பெற்றானை யேனைய
மன்னுயிரெல்லாந் தொழும்.

அ

அற - முழுதும். ஏனைய - மற்றவை.

தன் உயிரைத்தனக்கு உரித்தாகப்பெற்றவனை மற்ற மன்னுயிரெல்லாந் தொழும்.

269. கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்றறலைப்பட்ட வர்க்கு .

கூ

கூற்றம் - இயமன். குதித்தல் - கடத்தல். கைகூடும் -

அடையும். (ஆற்றறலை: ஆற்றல், தலை.)

தவபலத்தையடைந்தவர்க்கு எமனுக்கு நீங்குதலும் கை கூடும்.

270. இலர் பலராகிய காரணநோற்பார்
சிலர் பலர் நோலாதவர்.

ம

இலர் - வறியவர்.

ஏழைகள் அநேகராயிருப்பதற்குக்காரணம் தவசிகள் சிலரும் தவஞ் செய்யாதார் பலருமாயிருப்பததான்.

சில



## 28. கூடாவொழுக்கம்.

271. வஞ்சமனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும்.

க

படிறு - பொய்.

வஞ்சகமனத்தானின்பொய் ஒழுக்கத்தைக் (கண்டு) ஐம்பூதங்களும் உள்ளத்தில் நகைக்கும்.

அவன்

272. வானுயர் தோற்றமெவன் செய்யுந்தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின்

உ

அறி - அறிந்த. படின் - படிந்தால்.

தான் அறிந்த குற்றத்தினுல் தன்மனம் (படிந்தால்) அவன் வான் போல்உயர்ந்த வேடம் என்னசெய்யும்.

தாழுமானுல்

273.

வலியிணிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்து மேய்ந்தற்று.

ரு.

வலி - வலிமை. பெற்றம் - பசு.

வலிமையில்லாத நிலைமையையுடையவனின் பலமான தோற்றம் பசு புலியின் தோலைப்போர்த்துக்கொண்டு மேய்ந் தால்போலாம்.

274. தவமறைந்தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட் சிமிழ்த்தற்று.

ரு

புதன் - புதர். புள் - பட்சி. சிமிழ்த்து - பிடித்து.

தவவேஷத்தில் மறைந்துகொண்டு பாவங்களைச்செய்தல் வேடன் புதரில் மறைந்து பறவைகளைப்பிடித்தல் போலாம்.

27 5.

பற்றற்றேமென்பார் படிற்றொழுக்கமெற்றெற்
றேதம் பலவுந் தரும். [றென் று

பற்று - ஆசை. படிறு - வஞ்சனை. ஏதம் - ஏற்று - ஏது.

அன்பம்.

ஆசையற்றவர்களாயிருக்கிறோமென்பவரின் வஞ்சனையான ஒழுக்கம் அதென்ன அதென்ன என்று (அழும்படி) பங்களையுந் தரும்.

பலதுன் ——— ——

276. நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணாரில்.

கா

மனதில் துறவாதவராகித் துறந்தவர்போல் வஞ்சித்து வாழுகிறவர்களைப்பார்க்கிலும் இரக்கமற்றவரில்லை.

277. புறங்குன்றி கண்டனையரேனுமகங் குன்றி
மூக்கிற் கரியாருடைத்து.

எ

குன்றி - குன்றுமணி.

புறம்பே குன்றுமணியைப்போல் செம்மையாய்த் தோற்றினும் அகத்தில் குன்றுமணியின் மூக்கிலுங் கருமையுள்ளவரை (உலகம்) உடையது.

278. மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

அ

மாண்டார் - மாட்சிமையுள்ளவர்.

குற்றம் மனதிலிருக்க மாட்சிமையுள்ளவராய் நீரிலே முழுகி மறைந்து நடக்கும் மனிதர் அநேகர்.

279. கணைகொடிதியாழ் கோடு செவ்விதாங்கன்ன
வினைபடு பாலாற் கொளல்.

கூ

கணை - அம்பு. கோடு - கோணல். அன்ன - அப்படிப்

பட்ட. படு - செய்கிற. பாலால் - பகுதியால்.

(செவ்வையான) அம்பு கொடியது; இனியசத்தமுள்ளது; அப்படி அவர்கள் யால் அதை அறியவேண்டும்.

கோணலான வீணை
செய்கையின் பகுதி

280. மழித்தலுநீட்டலும் வேண்டா வுலகம்
பழித்தவொழித்து விடின்
ம

மழித்தல் – மொட்டையாக்கல்.
உயர்ந்தோர் பழிப்பதை நீக்கிவிட்டால்
அழித்தலும் நீட்டலும் வேண்டியதில்லை.

(தலைமயிரை)



29. களளாமை

281. எள்ளாமை
வேண்டுவானென்பானெனைதமதான
கள்ளாமை காக்க தன்னெஞ்சு. [றங்
க

எள்ளாமை – இகழாமை. கள்ளாமை – திருடாமை.
(முத்தியை) இகழாமல் வேண்டுபவன்
திருடாமல் தனமனதைக் காப்பானாக.

யாதொன்றையுங் 282.

உள்ளத்தாலுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வேமெனல். ௨

(எனல் - என், அல்.)

மனத்திலே நினைத்தலுந் தீமையாகும். (ஆதலால்) பிறன் பொருளைத் திருட்டுத்தனமாய்க் கவர்ந்துகொள்ளுவோமென் றே.

283. களவினாலாகிய வாக்கமள விறந்
தாவது போலக் கெடும். ௩

களவுசெய்தலினால் உண்டாகிய செல்வம் அளவுகடந்து விர்த்தியானாலுங் கெட்டுப்போகும்.

284. களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும். ௪

கன்றிய - மிகுந்த. காதல் - ஆசை.
விழுமம் - துன்பம்.
வீயா - அழியாத.

களவிலுள்ள மிகுந்தஆசை பலன்கொடுக்கும்போது தொலையாத துன்பத்தைத் தரும்.

285.

அருள்கருதியன்புடையராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார் கணில். ௫

பொச்சாப்பு - மறதி.

அருளைவிரும்பி அன்புடையவராதல் பொருளைக் (பிறர்) சோர்வைப்பார்ப்பவரிடத்தில்இல்லை.

கோர்.

286. அளவின்கணின் றொழுகலாற்றார்களவின்கட் கன்றிய காதலவர்.

(கணின்று - கண்ணின்று.)

களவில் அதிக ஆசையுள்ளவர் ஞான வழியில்நின்று நடக்கமாட்டார்.

287. களவென்னுங்காரறி வாண்மை யளவென்னு மாற்றல் புரிந்தார்கணில்.

கார் - இருண்ட. அளவு - அளத்தல்.

களவென்னும் இருண்ட அறிவீனம் அளத்தலென்னும் பெருமையை விரும்பினவரிடத்திலஇலலை.

288. அளவறிந்தார் நெஞ்சத்தறம்போல நிற்குங் களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

கரவு - வஞ்சனை.

ஞான அளவையறிந்தவரின்நெஞ்சில்அறம் நறகிறதுபோல் களவையறிநதவர் நெஞ்சில வஞ்சனை நிற்கும்.

289. அளவல்லசெய்தாங்கே வீவர்களவல்ல
மற் றை ய தேற்ருத வர்.

க.

வீவர் - கெடுவர். தேற்ருதவர் - அறியாதவர்.

களவு அல்லாத தவைகளைச்செய்ய மற்றவைகளை அறியாதவர் அப்போதே கெடுவார்.

அளவுஅல்லா 290. களவாகருத தளருமுயிர்நிலை
தள்ளாது புத்தேளுலகு.

களளாகருத

ம

உயிர்நிலை - சரீரம்.

திருடருக்கு அவர்கள் உடம்பும் தவறும்.
வரைத் தேவலோகந் தள்ளிவிடாது.

திருடாத



அறத்துப்பால்

## 30. வாய்மை.

291.
வாய்மையெனப்படுவதியாதெனின் யாதொன்றுந
தீ மையி லாத சொ லல் .

வாய்மை - உண்மை.
உண்மை யெனப்படுவது ஏதென் ருல்

கொஞ்சமாகிலுந் தீமையில்லாதவைகளைச் சொல்லுதலாம்.

292. பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்குமெனின்.

உ.

பொய்ம்மை - பொய். புரை - குற்றம்.

குற்றமற்ற நன்மையைக் கொடுக்குமாகில்
தும் மெய்க்கு ஒப்பாகும்.

பொய்யான

293. தன்னெஞ்சறிவது பொய்யற்க
பொய்த்தபின்
றன்னெஞ்சே தன்னைச்சுடும்.

ந

ஒருவன் தன மனமறிந்ததைப்
பொய்யாதிருப்பானாக. பொய் சொன்னால் தன்மனது
தன்னைச்சுடும்.

294. உள்ளத்தாற் பொய்யாதொழுகினுலகத்தா
ருள்ளத்து ளெல்லாமுளன்.

ச

ஒழுகின் - நடந்தால்.

ஒருவன் தன் மனதறியப் பொய்சொல்லாமல்
நடப்பானாகில் அவன் உலகத்தாரின் எல்லாமனங்களிலும்
இருப்பான்.

295.

மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய்வாரிற் றலை. ரு

ஒருவன் மனத்தோடு
றுகில் அவன் தவத்தோடு

பொருந்த உண்மையைச் சொல்வா
தானஞ்செய்வாரிலுந் தலையாவான். அறத்தபபால.
ஈச

296. பொய்யாமை யன்ன புகழில்லை பெய்யாமை
யெல்லா வறமுந் தரும்.
சா

அன்ன - ஒத்த; எய்யாமை - வருந்தாமை.

பொய் சொல்லாமைக்கு ஒப்பான புகழில்லை. (உடம்பு) வருந்தாமல் எல்லாஅறமுந் தரும்.

அது
297 பொய்யாமை பொய்யாமை யாற்றினறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.
எ

ஒருவன் பொய் சொல்லாமல் இருந்தால் பொய்யாமை யானது அறம்;
வேறுகாரியங்களைச்செய்யாமலிருந்தால் செய் யாமை நல்லது.

298. புறந்தூய்மை நீரானமையுமகந் தூய்மை
வாய்மையாற் காணப்படும்.

அ உடம்பின் சுத்தம் நீராலுண்டாகும்; மனச்சுத்தம் மையால் அறியப்படும்.
உண்

299. எல்லாவிளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

அ
பெரியோருக்கு எல்லாவிளக்கும் விளக்கல்ல; பொய்யாமையாகிய விளக்கே விளக்காம்.

300. யா மெ ய் யாக் கண்டவற்றுளில்லையெனைத் தொன்
வாய்மையினல்ல பிற. [றும்
ம்

எனைத்து - எது.
நாம் மெய்யாய்க் கண்டவைக்ளில் உண்மையைப்பார்க்கினும் நல்லவையாகிய பிற்காரியங்கள் யாதொன்றுமில்லை.



அறத்துப்பால்

## 31. வெகுளாமை.

301. செல்லிடத்துக்காப்பான் சினங்காப்பானல்லிடத்
காக்கினென் காவாக்காலென் [துக்

அ
செல் - போகும். என் - என்ன.

சினஞ் செல்லுமிடத்தில் காப்பவன் அதைக்காப்பவனு வான். செல்லாவிடத்தில்அதைக் காத்தாலென்ன. காக்காவிட் டாலென்ன.

302. செல்லாவிடத்துச்சினந் தீது செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற.

உ

செல்லாத விடத்தில் கோபம் தீமையாம்; செல்லுமிடத் தில் அதைப்பார்க்கத் தீமையுடையது வேறொன் றுமில்லை. 303. மறத்தல் வெகுளியை யார்மாட்டுந்தீய
பிறத்தலதனான் வரும்.

ங

வெகுளி - கோபம்.

யாவரிடத்திலுங் கோபத்தைமறப்பாயாக. அதினால் தீயவைகள் உண்டாகும்.

304. நகையு முவகையுங் கொல்லுஞ்சினத்திற்
பகையு முளவோ பிற.

ச

உவகை - மகிழ்ச்சி.

நகைப்பையும் மகிழ்ச்சியையுங் கெடுக்குங் கோபத்தைப் பார்க்கிலும் வேறுபகையுமுண்டா.

305. தன்னைத்தான் காக்கிற்சினங்காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம்.

ரு

ஒருவன் தன்னைத்தான் காக்க நினைத்தால் கோபம் வாராமல் காக்கக்கடவான். காக்காவிட்டால் கோபம்

அவனையே அழிக்கும்.



3 06.
சினமென்னுஞ்சேர்ந்தாரைக்கொல்லியினமென்னு
மேமப்புணையைச் சுடும்.

சேர்ந்தாரைக்கொல்லி - நெருப்பு. ஏமம் - காவல்.

புணை - கப்பல்.

கோபம் என்னும் நெருப்பு சுற்றம் என்னுங் காவலையுஞ்சுடும்.

௧௦௬

307. சினத்தைப் பொருளென்று கொண்டவன்கேடு
நிலத்தறைந்தான் கைபிழையாதற்று.

௭

நிலத்தில் அறைந்தவனின் கைதப்பாமல் படுவதுபோல் கோபத்தைப் பொருளென்று கொண்டவனின் கேடு தப்பமாட்டாது.

308. இணரெரி தோய்வன்ன வின்ன செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

௮

இணர் - சுடர், எரி - தீ. தோய்வு - சுற்றுதல். வெகுளாமை - கோபமில்லாமை.

வெகு

பலசுடர்களையுடைய தீ சுற்றிக்கொள்வதுபோல் ஒருவன் தீமைசெய்தாலும் கோபமில்லாமை கூடுமாகில் நல்லது.

309. உள்ளியவெல்லாமுடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின்.

கூ

உள்ளுதன் - நினையான்.

ஒருவன் தன் உள்ளத்தில் கோபத்தை நினையானாகில் அவன் நினைத்ததெல்லாம் உடனே பெறுவான்.

310. இறந்தாரிறந்தாரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

ω

இறந்தார் - மிகுத்தவர். அனையர் - ஒப்பானவர்.

கோபத்தில் மிகுத்தவர் செத்தவருக்கு ஒப்பாவார். கோபத்தைவிட்டு விட்டவர் துறவிகளுக்கு ஒப்பாவார.





## 32. இன்னாசெய்யாமை.

311. சிறப்பீனுஞ் செல்வம்பெறினும் பிறாக்கின்னா
செய்யாமை மாசற்றார்கோள்.

க

இன்னா - துன்பம். கோள் - கொள்கை.

சிறப்பைக்கொடுக்குஞ்
குத் துன்பஞ் செய்யாமை

செல்வத்தைப்பெற்றாலும் பிறர்க்
குற்றமற்றவரின் கொள்கையாம். 312. கறுத்தின்னா

செய்தவக்கண் ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

உ

கறுத்து - கோபித்து.

ஒருவன் கோபித்துத் துன்பப்படுத்தின
அவ்விடத்திலும் அதற்குப்பதிலுக்குப்பதில் செய்யாமை
மாசற்றவரின் கொள்கையாம்.

313. செய்யாமற் செற்றார்க்குமின்னாத செய்தபி
னுய்யா விழுமந் தரும்.

ந

செற்றார் - பகைவர். உய்யா - தப்பாத. விழுமம் -
பம்.

துன்.

முகாந்திரமில்லாமல் பகைக்கிறவர்களுக்குந்
தீமைகளைச் செய்தபின் அது தப்பாததுன்பத்தைத்தரும்.

314. இன்னாசெய்தாரை யொறுத்தலவர் நாண
நன்னயஞ் செய்து விடல்.

ச

ஒறுத்தல் - தண்டித்தல். நயம் - இனிமை.

துன்பஞ் செய்தவர்களைத் தண்டித்தலாவது
அவர்கள்
வெட்கும்படி அவர்களுக்கு இனிமையானவைகளைச்
செய்து
விடுதலாம்.

315. அறிவினானாகுவதுண்டோ பிறிதினோய
தந்நோய் போற்போற்றாக்கடை.

௫

பிறிது - வேறு. போற்றாக்கடை -
எண்ணாதவிடத்தில்.

மற்றவைகளுக்குண்டான வருத்தத்தைத் தமது வருத்தம் போல் எண்ணாதவிடத்தில் அறிவினாலாகும் பயன் என்ன.

அறத்துப்பால். ௯௰

316. இன்னாவெனத்தானுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல்.

௬

துன்னாமை - பொருந்தாமை.

இவை துன்பந்தருமென்றுதான் அறிந்தவைகளைப் பிறருக்குச் செய்யாமல் நீக்கிவிடவேண்டும்.

317. எனைத்தானுமெஞ்ஞான்றும்யார்க்கு
மாணா செய்யாமை தலை.

மனத்தான

௭

மாணா - துன்பம்.

எக்காலத்திலும் யார்க்கும் மனம் பொருந்தி லும் தீமைசெய்யாமை முதன்மையாம்.

எவ்வ ளவ ர

318. தன்னுயிர்க்கின்னாமை தானறிவானென்கொலோ
மன்னுயிர்க்கின்னா செயல். அ

தன்னுயிர்க்குத் துன்பஞ் செய்யுமவைகளை
மற்றஉயிர்களுக்குத் துன்பஞ் செய்வானேன்.

அறிபவன் 319.

பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும். கூ

பிறருக்குத்துன்பங்களை முற்பகலில் செய்தால்
இனிமையல்லாதவைகள் பிற்பகலில் தானே வரும்.

தனக்கு
320. நோயெல்லா நோய்செய்தார்

மேலவாநோய்செய்
நோயின்மை வேண்டுபவர். [யார்
ம

துன்பம் எல்லாந் துன்பஞ் செய்தவர்க்கு வரும்.
யின்மையை விரும்புகிறவர் துன்பஞ் செய்யார்.

துன்ப



## 33. கொல்லாமை

321. அறவினையாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாந் தரும்.
௧

கோறல் - கொல்லுதல்.

தர்மச்செய்கை எதென்றால் கொல்லாமையாம். கொல்லுதல் பாவச்செய்கைகள் யாவையுந் தரும்.

322. பகுத்துண்டு பல்லுயிரோம் புதனூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.
௨

பங்கிட்டுச் சாப்பிட்டுப் பலஉயிர்களையுங் காப்பாற்றல் நூலோர் தொகுத்தவற்றுளெல்லாந் தலைமையாம்.

323. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

௩

சார - நிற்க.

ஒப்பற்றதாக நல்லது கொல்லாமை. அதற்குப்பின் பொய்யாமை நன்று.

324. நல்லாறெனப் படுவதியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி.
௪

சூழும் - நினைக்கும்.

நல்லவழி என்னப்படுவதியாதென்றால்
கொல்லாதிருக்க நினைக்கும் வழியாம்.

யாதொன்றையுங் 325.

நிலையஞ்சி நீத்தாருளெல்லாங் கொலை யஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை. ரு

நிலைக்குப் பயந்து துறந்தவர்களெல்லாருள்ளுங் கொலைக்கு
அஞ்சிக் கொல்லாமையை நினைப்பவன் உயர்ந்தோன்.

அறத்துப்பால்.

326. கொல்லாமை
செல்லாதுயி

மேற்கொண்டொழுகுவான் வாழ
ருண்ணுங்கூற்று. [நாண்மேற் கூ

கூற்று - இயமன்.
உயிரைக் கொண்டுபோகும் எமன்
கொல்லாமையைச் சிறந்ததாக எண்ணி நடப்பவனின் ஆயு
மாட்டான்.
ள் நாள்மேல் செல்ல 327. தன்னுயிர் நீப்பினுந்
செய்யற்க தான் பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.
எ

நீப்பினும் - போனாலும்.
தன் உயிர்போனாலுந் தான்வேறொன்றின் இனிய

உயிரைப்போக்குந் தொழிலைச் செய்யாதிருப்பாராக.

328. நன்றாகுமாக்கம் பெரிதெனினுஞ்
கொன்றாகுமாக்கங் கடை.

சான் றோர்க் குக்
அ

(யாகத்தில் கொன்றால்) நன்மையாகுஞ் செல்வம் தாகிலுஞ் சான்றோர்க்குக் கொல்லுதலால் உண்டாகும் இழிவானது.
பெரி
ஆஸ்தி

329. கொலைவினையராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவாரகத்து.

சு

வினையர் - தொழிலையுடையவர். புலை - நீச.
புன்மை - இழிவு.

கொலைத் தொழிலைச் செய்யும் மனிதர் அதின் இழிவை அறிபவரின் மனதில் நீசத்தொழிலுடையவராய்த் தோற்றுவார்.

3 30.

உயிருடம்பினீக்கியா ரென்பர் செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கையவர். ம

செயிர் - நோய். தீ - கெட்ட.

நோய் உடம்புடனே வறுமையோடு கூடிய

வாழ்வையு டையவனிர உயிரை உடம்பிலிருந்து நீக்கினவரென்பார்கள்.





## 34. நிலையாமை.

331. நில்லாதவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறிவாண்மை கடை.

க

புல்லறிவு - அற்பப்புத்தி. கடை - இழிவு.

நிலையற்றவைகளை நிலையுள்ளவைகளென்று
அற்பபுத்தி இழிவானது.

நினைக்கும்

332.
கூத்தாட்டவைக் குழாத்தற்றே பெருஞ்செல்வம்
போக்குமது விளிந்தற்று.

உ

அவை - சபை. குழாம் - கூட்டம். விளிந்து - கலைந்து.

அதிகச் செல்வஞ் சேருதல் கூத்தாடுகிற சபையில் கூட்டங் கூடுகிறதுபோலாம். அச்செல்வம் போகுதல் கூட்டங் கலைவது போலாம்.

833. அற்கா வியல்பிற்றுச் செல்வமது பெற்றால்
அற்குப வாங்கே செயல்.

ந

அற்கா - நிலையாத. அற்குப - நிலையுள்ளவைகள்.

செல்வம் நிலையாத தன்மையையுடையது. அதைப் பெற்றால் நிலையுள்ளதாகிய தர்மத்தை உடனே செய்யக்கடவாய்.

334. நாளெனவொன்று போற் காட்டியுயிரீரும்
வாளதுணர்வார்ப் பெறின்.

ச

ஈரும் – அறுக்கும்.

நாளென்று தன்னை ஒருபொருள்போல் காட்டினாலும் அது சிவனை அறுக்கும் வாள் என்பதை அறிபவர்களைப்பெற்றால் நன்மையாம்

3 3 5.

நாச்செற்றுவிக்குண் மேல் வாராமுன்னல்வினை
மேற்சென்று செய்யப்படும். ரு

செற்று – அடக்கி. மேற்சென்று – சீக்கிரமாய்ப்போய் நாவை அடக்கி விக்கல் சீக்கிரஞ் செய்யப்படும்.

எழுவதற்குமுன்னமே நல்வினை அறத்துயபால.

கக

336. நெருநலுள னொருவனின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ்வுலகு.

சா

நெருநல் – நேற்று.

நேற்றிருந்தவன் இன்றைக்கில்லை யென்று சொல்லும் பெருமையை இவ்வுலகுடையது.

337. ஒருபொழுதும் வாழ்வதறியார் கருதுப
கோடியுமல்ல பல.

எ

கருதுப - நினைப்பார்கள்.

ஒரு கணப்பொழுதும் வாழ்வதை அறியாதவர்கள் கோடி யளவு மாத்திரமல்ல அதிலும் அதிகமானவைகளை நினைப்பார்கள்.

338. குடம்பை தனித்தொழியப் புட் பறந்தற்றே
யுடம்போடுயிரிடை நட்பு.

அ

குடம்பை - முட்டை.

சரீரத்தோடு உயிருக்குண்டாயிருக்கிற சிநேகம் பறவை முட்டையைத் தனித்து விட்டுப் பறந்துபோனதுபோலாம்.

339. உறங்குவது போலுஞ் சாக்காடுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

கூ

சாக்காடு - சாவு.

மரணந் தூக்கம்போலும் பிறப்பு தூங்கி விழிப்பதுபோலும்.

340. புக்கிலமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சிலிருந்த வுயிர்க்கு.

ம

புக்கில் - வீடு. துச்சில் - ஒதுக்குக்குடி.

உடம்பில் ஒதுக்குக்குடியிருந்த உயிர்க்கு இருக்கும்படியான வீடு அமைந்ததில்லையா.

எப்போதும்





## 35 துறவு.

341. யாதனின் யாதெனி னீங்கியானோத லதனினதனினிலன். க

நோதல் - துன்பம்.
ஒருவன் என்னென்னத்தினின்று நீங்கினானோ னால துன்பத்தை யடையான்.

அவைக 342. வேண்டினுண்டாகத் துறக்க துறந்த பி

னீண்டியற் பால பல.
உ

துறந்த பின்பு இவ்வுலகிலுண்டாகும் இன்பங்கள் அநேகம். அவைகள் உண்டாக விரும்பினால் துறக்கக்கடவாய்.

343. அடல்வேண்டு மைந்தின்புலத்தை விடல்வேண் [டும்
வேண்டிய வெல்லாமொருங்கு.
ந

அடல் - கெடுத்தல். ஒருங்கு - ஒருமிக்க.
ஐம்புலன்களையுங் கெடுத்தல் வேண்டியது.
களையெல்லாம் ஒருமிக்கவிடவேண்டும்.

வேண்டியவை 344.

இயல்பாகு நோன்பிற்கொன்றின்மையுடைமை
மயலாகு மற்றும்பெயர்த்து. ௪

நோன்பு - தவம். பெயர்த்து - விட்டுவிடல்.
தவத்துக்கு ஒரு பற்றுமில்லாதிருக்கை இயல்பாகும்.
றுடைமை மயக்கமாகித் தவத்தை நீக்கும்.

பற்
345. மற்றுந்தொடர்ப்பாடெவன் கொல்
பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.
ரு

தொடர்ப்பாடு - பற்று. மிகை - பாரம்.
பிறவியை நீக்கிப்போட முயற்சிப்பவர்க்கு உடம்பும்
ரமாம். ஆதலால் பற்று அவர்களை என்னசெய்யும்.

பா
அறத்துப்பால
346. யானெனதென்னுஞ்
செருக்கறுப்பான்வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.
கா

புகும் - புகுவான்.

நான் எனது என்னும் மயக்கத்தை அறுப்பவன் தேவர்க் கும் அடைவதற்கரிதாகிய உலகத்தில் பிரவேசிப்பான்.

347 பற்றிவிடா அ விடும்பைகள் பற்றினைப்
பற்றிவிடா அதவர்க்கு .

67

பற்றினை - ஆசையை.

பற்றுக்களைப் பற்றிக்கொண்டு விடாதவர்களைத் துன்பங் கள் பற்றிக்கொண்டு விடாது.

348. தலைப்பட்டார் தீரத்துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவர்.

அ

தீர - முழுவதும். தலைப்பட்டார் - அடைந்தவர்.

முழுதுந் துறந்தவர் முத்தியை யடைவார். மயங்கி வலையில் அகப்பட்டவராவரர்.

மற்றவ ர்கள்

349. பற்றற்றகண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப்படும்.

கூ

அறுக்கும் - நீங்கும்.

பற்று அற்றபோது பிறப்பு நீங்கும். அது நிலையாமை காணப்படும்.

அருதபோத

350. பற்றுக பற்றற்ருன்

பற்றினையப்பற்றைப்
பற்றுக பற்றுவிடற்கு.

ஒ

கடவுளின் முத்தி வழியைப் பற்றக்கடவாய். உன்
கள் நீங்கும்படி அப்பற்றைப் பற்றக்கடவாய்.

ஆசை



அறத்துப்பால்.

## 36. மெய்யுணர்தல்.

351. பொருளல்லவற்றை ப்பொருளென்றுணரு
மருளானு மாணுப் பிறப்பு.

பொருளல்லாதவைகளை மெய்ப்பொருளென்று நினைக்கும்
மயக்கத்தால் மாட்சிமையற்ற பிறவி உண்டாகும்.

352. இருணீங்கி யின்பம் பயகுமருணீங்கி
மாசறு காட்சியவர்க்கு.

மயக்கம் நீங்கின மெய்யறிவுடையவர்களுக்கு
உ நீங்கின இன்பமுண்டாகும்.

இருள் 353. ஐயத்தினீங்கித் தெளிந்தார்க்கு
வான நணியதுடைத்து.

வையத்தின்

௩

நணியது - சமீபமானது.

சந்தேகத்திலிருந்து நீங்கித் தெளிந்தவர்களுக்குப் பூமியிலும் வானஞ் சமீபமாம்.

பூமியி 354. ஐயுணர்வெய்தியக் கண்ணும் பயனின்றே
மெய்யுணர்வில்லாதவர்க்கு .

எய்தியக்கண்ணும் - வசப்பட்டாலும்.

மெய்ஞ்ஞானமற்றவர்களுக்கு ஐம்புலன்களும் வசப்பட்டாலும் பிரயோசனம் இல்லை.

வசப்பட் 355.

எப்பொருளெத்தன்மைத்தாயினுமப்பொருண்
மெய்ப்பொருள் காண்பதறிவு. ரு

எந்தப் பொருள் எந்தத் தன்மையை யுடையதாயிருந்தாலும் அப்பொருளினிடமும் மெய்ப்பொருளைக் காண்பது அறிவாகும்.

அறத்துப்பால். எ௬

356. கற்றீண்டு மெய்ப்பொருள்
மற்றீண்டு வாரா நெறி.
கண்டார்தலைப்படுவர்

கள்

தலைப்படுவர் - சிறந்தவராவார். நெறி - வழி.

இவ்வுலகில் படித்து
மெய் ப்பொருளைக் கண்டறிந்தவர்க ள்
இவ்வுலகிற்குத்திரும்பிவராதவழியை அறிவார்கள்

357. ஓர்த்துள்ளமுள்ளதுணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

எ

ஓர்த்து - ஆராய்ந்து. ஒருதலையா - நிச்சயமாக.

ஒருவனின் மனம் நிச்சயமாய் மெய்ப்பொருளை ஆராய்ந்து உணர்ந்தால் அவன் பிறத்தலை மறுபடியும் நினைக்கவேண்டிய தில்லை.

358.

பிறப்பென்னும்பேதைமை நீங்கச்சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்பதறிவு. அ

செம்பொருள் - மெய்ப்பொருள்.

பிறப்பென்னும் அஞ்ஞானம் நீங்கச்சிறப்பென்னும் மெய்ப் பொருளைக் காண்பதே அறிவாம்.

359.

சார்புணர்ந்துசார்புகெடவொழுகின்மற்றழித்துச்
சார்தரா சார்தருநோய். கூ

சார்பு - பற்று. சார்தரா - சேராது.

ஒருவன் மெய்ப்பொருளையறிந்து ஆசைநீங்க நடந்தால் அவனைச் சேரவிருக்குந் துன்பங்கள் திரும்பச் சேராவாம்.

360. காமம் வெகுளி மயக்கமிவை மூன்ற
ஞமங் கெடக் கெடு நோய்.

காமம், கோபம், மயக்கமாகிய இம்மூன்றின்
ம கெட்டால் துன்பமுங்கெடும்.

பேருங்



ஈசு அறத்துபபால

## 37. அவாவறுத்தல்.

361 அவாவென்பவெல்லாவுயிர்க்கு
தவாஅப் பிறப்பீனும் வித்து.

மென்ஞான்றுங்

அவா - ஆசை. தவா - கெடாத.

எல்லாவுயிர்களுக்கும் எக்காலத்திலும் முடியாத விளைவிக்கும் விதை ஆசை என்று சொல்லுவார்கள்.

பிறப்பை

362. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை
மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.
உ

ஒருவன் ஒன்றை விரும்பினால் பிறவாமையை வேண்டும். இச்சியாமையை விரும்ப அது வரும்.

விரும்ப

363. வேண்டாமையன்ன விழுச்செல்வ
யாண்டுமஃதொப்பதில்.

மீண்டில்லை

ந

இவ்வுலகில் விரும்பாமையைப் போலுஞ் சிறந்த செல்வ மில்லை. அவ்வுலகத்திலும் அதுக்குச் சமதையானதில்லை.

364. தூஉய்மை யென்பதவா வின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.
ச

சுத்தமென்பது ஆசையின்மையாம். அது மெய்ம்மையை ஆசிக்க வரும்.

365. அற்றவரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாகவற்றதிலர் .

ரு ஆசையற்றவர் அற்றவரென்னப்படுவோர்.
படி அற்றவர்கள் அல்ல.
மற்றவர்கள் அப் அறத்தாம்பால். ௬ரு

366. அஞ்சுவதோரு மறனே யொருவனை
வஞ்சிப்பதோருமவா.

சு

(ஓரும், அசைநிறை.)
ஒருவனை மோசப்படுத்துவது ஆசை;
வேண்டியது தர்மமே.
அதற்குஅஞ்சிக்காக்க

367. அவாவினையாற்ற வறுப்பிற் றவாவினை
தான் வேண்டுமாற்றான் வரும்.

எ

அறுப்பில் - நீக்கினால்.
ஒருவன் ஆசையை முழுவதும் நீக்கினால்
கெடாமைக்கு ஏதுவாகிய செயல்தான் விரும்பும் வழியால்
உண்டாகும்.

368. அவாவில்லார்க்கில்லாகுந் துன்பமஃதுண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்.

அ

உண்டேல் - உண்டானால்.
ஆசையற்றவர்களுக்குத் துன்பமில்லை. ஆசை
துன்பம் ஒழியாமல் மேலும் மேலும் வரும்.

இருந்தால்

369. இன்பமிடையறாதீண்டுமவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

௬௯

துன்பங்களுக்குள் துன்பமாகிய ஆசைகெட்டால்
வுலகிலும் இன்பம் மத்தியில் நீங்காதிருக்கும்.

இவ்

370. ஆராவியற்கை யவா நீப்பினந்நிலையே
பேரா வியற்கை தரும்.

ம

ஆரா - நிரம்பாத. இயற்கை - தன்மை.
மாறுத. நீப்பின் - விட்டால்.

பேரா -

ஒருவன் நிரம்பாத தன்மையையுடைய ஆசையை
விட்டு விடுவானுனல் அது அப்போதே மாறுத
தன்மையைக்கொடுக் கும்.



௩௮ அறத்துபபால.

38. ஊழ.

37 1 . ஆகூழாற்றோன்று
மசைவின்மைகைப்பொருள்
போகூழ ாற்றோன்றுமடி.

க

ஊழ் - விதி. அசைவின்மை - முயற்சி. மடி -
பல்.

சோம்

முயற்சி ஆகும்விதியினால் உண்டாகும்; சோம்பல் பிலுள்ள பொருள் போகும் விதியினால் தோன்றும்.

மைக

372. பேதைப்படுக்கு மிழவூழ றிவகற்று
மாகலூழுற்றக் கடை.

உ

பேதைப்படுக்கும் - அறியாமையாக்கும்.

ஆகல்-ஆகும்

இழத்தற்கு எதுவாகிய ஊழ்அறியாமையைக் கொடுக்கும். ஆகும் ஊழ்உண்டாகும்போது அறிவை அதிகப்படுத்தும்.

373. நுண்ணிய நூல்பல கற்பினுமற் றுந்தன்
னுண்மை யறிவே மிகும்.

ஈ

நுட்பமாகிய அநேக நூற்களைப் படித்தாலும் தனது ஊழி னுலாகிய அறிவு மேற்படும்.

374. இருவேறுலகத்தியற்கை திருவேறு
தெள்ளியராதலும் வேறு.

ச

வேறு - பங்கு. தெள்ளியராதல் - அறிவுடையவரா
தல்.

உலகத்தன்மை இரண்டுபெங்கு;
ஒன்று, அறிவுடையவராதல் ஒன்று.

செல்வமுடையவராதல்

375. நல்லவை

யெல்லாஅந்தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற் கு .
ரு

செல்வத்தை உண்டாக்குவதற்கு நல்லவை யெல்லாந் தீயவையாகும்; தீயவை எல்லாம் நல்லவையாகும்.

அறத்துப்பால், எஎ.

376. பரியினுமாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம.

கூ

பரியினும் - வருந்தினாலும். பால் - ஊழ். உய்த்து கொண்டுபோய்.

-

ஊழினால் அல்லாமல் தம்முடைய வைகளை வருந்திக்காப் பாற்றினாலும் ஆகாது; தம்முடையவைகளைச் சொரிந்து வெளியே கொட்டிவிட்டாலும் போகாது.

377: வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்தலரிது.

எ

வகுத்தான் - கடவுள். தொகுத்தார் - சேர்த்தவர்.
துய்த்தல் - அநுபவித்தல்.

கோடி ப்பொருளைச் சேர்த்தவர்க்குங் கடவுள் அமைத்த அமைப்பன்றி அநுபவித்தல் அரிதாகும்.

378. துறப்பார் மற் றுப்புரவில்லாருறற் பால
ஊட்டா கழியு மெனின்.
துப்புரவு - அநுபவிப்பு. ஊட்டா - அடையாமல்.

அ

(மன், அசைநிலை.)
அடையுந் தன்மையையுடையவைகள் அடையாமல்

நீங் குமாளுல் அனுபவித்தல் இல்லாதவர் துறப்பார்.
379. நன்றுங்கானல்லவாக் காண்பவரன்றுங்கா
லல்லற் படுவதெவன்.

அ

நல்இன்பத்தைக் கொடுக்குங் காலத்தில் அவைகளை
நல்ல வைகளாக அநுபவிப்பவர் தீமையாகும் போது
வானேன்.
துன்பப்படு

380 ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான் முந்துறும்.

ம

வலி - வல்லமை. முந்துறும் —
முந்திக்கொள்ளும்.

ஊழைப்பார்க்கிலும் அதிகப்பலமுடையது எவை
இருக் கின்றன. வேறொன்று (முந்த) நினைத்தாலுந் தான்
கொள்ளும்.

அறத்துப்பால்.

முந்திக்

முற்றிற்று.

# அறத்துப்பால்

## அதிகாரவகராதியட்டவணை



# அறிக்கை

ன் இரண்டாம் பங்காகிய பொருட்பால் சீக்கிரத்தில் அச்சடிக்கப்படும்.



# குறள்

உ.

# பொருட்பால



# 39. இறைமாட்சி.

381. படை குடி கூழமைச்சு நட்பரணாறு
முடையா னரச ரு ளேறு.

க

குடி - நாடு. கூழ் - பொருள். அமைச்சு -
அரண் - கோட்டை. ஏறு - ஆண்சிங்கம்.

ம ந்திரி.

சேனை, நாடு, பொருள், மந்திரி, நட்பு, கோட்டை ஆகிய
ஆறையுமுடையவன் இராசாக்களில் ஆண்சிங்கமாவான்.

382. அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு.

உ

ஈகை - கொடுத்தல். ஊக்கம் - மனவெழுச்சி.

எஞ்

சாமை - குறையாமை. வேந்தன் - அரசன்.

பயப்படாமை, கொடுத்தல், அறிவு, மனவெழுச்சி
ஆகிய இந்த நான்கும் குறையாமை அரசர்க்கு இயல்பாம்.

383. தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனா ள் பவற்கு . .

ந

தூங்காமை - சோம்பலின்மை.

று ம்

சோம்பலின்மை, கல்வி, துணிவுடைமை ஆகிய இம்மூன் நிலத்தை ஆளுகிறவருக்கு நீங்காமலிருக்கவேண்டும்.

384. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மானமுடைய தரசு.

ச

இழுக்காது - தவறாது. மறம் - வீரம்.

அறத்தினின்று தவறாமல் தகாதவைகளை நீக்கி வீரத்திலிருந்து நீங்காத மானமுடையவன் அரசனாவான்.

385. இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

ரு

இயற்றல் - சம்பாதித்தல். ஈட்டல் - பெருக்கல்.

பொருளைச் சம்பாதிக்கவும் பெருக்கவும் காக்கவுங் தைச் செலவுசெய்யவுங் கூடியவனே அரசன்

காத்த
பொருட்பால் அசு

386. காட்சிகளியன் கடுஞ்சொல்ல னல்லனேன்
மீக்கூறு மன்ன னிலம்.

சா

மீ - மேலாக.

அரசன் காணுதற்கு எளியவனுங் கடுஞ்சொல் சொல் லாதவனுமாயிருந்தால் (உலகம்) அவன் நிலத்தை உயர்த்திச் சொல்லும்.

387. இன்சொலாலீத்தளிக்க வல்லாற்குத்
தன்சொ
ருன் கண் டனைத்திவ் வுலகு. [லாற்
எ

ஈத்து - கொடுத்து. அளிக்க - காப்பாற்ற.
கண்ட
ணைத்து - விரும்பின அளவு.

இனியசொல்லோடு கொடுத்துக் காப்பாற்றவல்லவனுக்கு இவ்வுலகம் தன் சொல்லினால் தான் விரும்பும் அளவு ஆகும்.

388. முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்க ப் ப டும் .
அ

இறை - கடவுள்.

நீதியை நடப்பித்து (தன் குடிகளைக்) காப்பாற்றும் அரசன் மனிதருக்குத் தேவனென்று எண்ணப்படுவான்.

389 .

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை
கவிகைக் கீழ்த்தங்கு முலகு. [வேந்தன் கூ

கைப்ப - கசப்பானவை. கவிகை - குடை.

காதுக்குக் கசப்பாயிருக்குஞ் சொல்லைப் பொறுத்துக் கொள்ளும நற்குணமுடைய அரசனின் குடைக்கீழ் உலகம் (சந்தோஷமாய்த்)தங்கும்.

390 .

கொடையளி செங்கோல் குடியோம்பு நான்கு
முடையானாம் வேந்தர்க் கொளி. ம

அளி - அருள்.

கொடுத்தல், அருள், செங்கோல், குடிகளைக் காப்பாற்ற லாகிய நான்கையுமுடையவன் அரசர்க்கு விளக்காவான்.



6

அச
பொருட்பால

## 40. கல்வி.

391. கற்க கசடறக் கற்பவை கற்றபி
ன்நிற்க வதற்குத் தக.

க

கசடு - பழுது.

ஒருவன் படிப்பவைகளைப் பழுதறப்படிக்கக்கடவன். படித்தபின்பு அதற்குத் தகுந்தபடி நிறகக்கடவன.

392. எண்ணென்பவேனை யெழுத்தென்ப
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

விவ்விரண்
[டுங் உ

ஏனை - மற்ற.

கணிதநூலும் இலக்கண நூலுமாகிய இரண்டையும் வாழுமுயிர்க்குக் கண்ணென்று அறிந்தோர் சொல்லுவார்கள். 393. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

ந

படித்தவர் கண்களுடையவ ரென்னப்படுவோர்;
வர்கள் முகத்தில் இரண்டு புண்களுடையவர்.

படியாத

394. உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில்.

ச

உவப்ப - மகிழ. தலைக்கூடி - சிநேகஞ்செய்து.
நினைக்க.

உள்ள-

கற்றறிந்தவர்தொழில் (சனங்கள்)
செய்து அவர்கள் நினைத்துவருந்தும்படி.

மகிழும்படி சிநேகஞ்
பிரிதலாகிய அத்தன்
மையையுடையது.

395.

உடையார்மு னில்லார் போலேக் கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர். ரு

ஏக்கற்றும் – தாழ்மையாய் நிற்கும்.

றுங்

செல்வமுடையவர்முன்னே ஏழைகள்போல்தாழ்ந்துநின்
கற்றவராவார். கல்லாதவர் இழிந்தவராவார்.

396. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு. ௬

தொட்ட - தோண்டின. அனைத்து - அவ்வளவு.
மணலிலுள்ளகேணி தோண்டின அளவு சரக்கும். மனிதருக்கு அறிவு கற்ற அளவு ஊறும்.

397. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு. ௭

(ஆல், அசைநிலை.)
படித்தவனுக்கு எந்தநாடும் எந்த ஊருஞ்சொந்தமாகும். ஒருவன் சாகுமளவும் படியாதகாரணமென்ன.

398. ஒருமைக்கட் டான் கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து. ௮

ஒருமைக்கண் – ஒரு பிறப்பில். ஏமாப்பு – உதவி.
ஒருவன் ஒருபிறப்பில் படித்தபடிப்பு அவனுக்கு எழு பிறப்பிலும் உதவியாகும்.

399. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். ௯

இன்புறுவது - இன்பமாயிருந்து.
தமக்கு இன்பமான கல்வி உலகத்திற்கும் இன்பமாயிருக்கக் கண்டு கற்றறிந்தவர்கள் அதை ஆசிப்பார்கள்.

400. கேடில் விழுச்செல்வங் கல்வியொருவற்கு
மாடல்ல மற்றை யவை. ௰

விழு - மேலான. மாடு - ஆஸ்தி.

ஒருவனுக்குக்கெடுதலற்ற மேலான செல்வம் கல்வி. மற்ற வஸ்துக்கள் ஆஸ்தியல்ல.





## 41. கல்லாமை.

401. அரங்கின்றி வட்டாடியற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளில்.

௧

அரங்கு - வகுப்பிடம். வட்டு - சூது.
கோட்டி-சபை.

நிறைந்த நூலின்றிச் சபையில் பேசுதல் வகுப்பிடம் இல்லாமல் சூது ஆடினது போலாகும்.

402. கல்லாதான்சொற்கா முறுதன் முலையிரண்டு
மில்லாதாள் பெண்காமுற்றற்று.

௨

காமுறுதல் - ஆசித்தல்.

படியாத ஒருவன் (சபையில்) பேச ஆசிதத்ல் இரண்டு கொஙகைகளுமறறவள் பெண்தன்மையை இச்சித்தல் போலாகும.

403. கலலாதவரு நனிநல்லர் கற்றூர்முற்
சொலலா திருககப் பெறின்.

௩

நனி - மிகவும்.

படியாதவரும் படித்தவர்முன் பேசாதிருக்கப்
பெறுவா ராஞல மிகவும் நல்லவராவார.

404. கல்லாதா ளொட்பங் கழியுநன் ருயினுங்
கொளளா ரறிவுடை யார்.

சு

ஒட்பம் - அறிவு. கழிய - மிக.
படியாதவன் அறிவு மிக நன்ருயிருநதாலும்
அறிவுடையவர்கள அதை அங்கிகரியார்கள்.

405. கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச சோர்வு படும்.

௫

தகைமை - மதிபபு. தலைப்பெய்து - கூட்டத்தில்
சோநது. சொல்லாட - பேச. சோரவுபடும் - கெடும்.
படியாதஒருவனின் மதிப்பு
கற்றவர்களின்சபையில பேசக் கெடும.

அஎ

406. உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர்.

கூ

உளர் - இருக்கிறவர். மாத்திரையர் - அளவினர்.
பயவா - விளையாத. களர் - வறண்டநிலம்.
கல்லாதவர் இருக்கிருரென்னும் அளவினரேயன்றி
விளையாத களர் நிலததுக்கு ஒப்பாவார.

407. நுண்மா ணுழைபுல மில்லா னெழினல
மண்மாண் புனைபாவை யற்று.

யரிலங்கு நூல்
கற்றாரோ ர டேனை யவர் .
ம
விலங்கு - மிருகம். இலஙகு - விளங்கிய. மற்றவர்.
ஏனையவர்-
மிருகங்களுக்கும் மனிதருக்கும் இருக்கும் வித்தியாசம் போல விளங்கிய நூல்களைக் கற்றவருக்கும் மற்றவருக்கும் உண்டு.



# 42. கேள்வி

4 1 1. செலவததுட செலவஞ் செவிச்செல்வ மச்செல்
செல்வத்து ளெல்லாந் தலை : [வஞ்

செலவத்துள் உயர்ந்த செல்வம் கேள்விச் செல்வம். அநதச்செல்வஞ் செல்வங்கள் எல்லாவற்றிலுந தலைமை யானது.

412. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்.

உ

காதுக்கு உணவாகிய கேள்வியில்லாதகாலத்தில கொஞ்சம் ஆகாரம் வயிற்றுக்குங் கொடுக்கலாம்.

413. செவியுணவிற் கேள்வியுடையா ரவியுணவி
ருன்றாரோ டொப்பர் நிலத்து.

ரு

அவி - வேள்வி. ஆன்றார் - தேவர்.

செவியுணவாகிய கேள்வியையுடையவர்கள் பூமியிலிருந்தாலும் வேள்வியாகிய உணவினையுடைய தேவருக்கு ஒப்பாவார்கள்.

414. கற்றிலனாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை.

ற

ஒற்கத்தின் - துன்பத்தில். ஊற்றாந்துணை - கோல.

ஊன்று

கல்லாதவனாகிலும் கேட்கக் கடவன; அது ஒருவனுக்குத் துன்பகாலத்தில் ஊன்றுகோலாகிய துணையாகும்.

415. இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார் வாய்ச்சொல்.

ழி

இழுக்கல - வழுக்கல். உடை - உடைய. உழி - இடம்.

ஒழுக்கமுடையவர்வாய்ச்சொல் சறுக்கல்நிலத்தில் ஊன்றுகோல போலாகும்.

ஆக

416. எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்.

சா

ஆன்ற - நிறைந்த.

(ஒருவன்) நல்லவைகளை எவ்வளவாகிலுங் கேட்கக்கடவான்; அவ்வளவுக்கும் நிறைந்தபெருமையைத்தரும்.

417. பிழைத்துணர்ந் தும் பேதைமைசொல்லா ரிழைத்
நீண் டிய கேள்வி யவர். [துணர்ந்
எ

ஈண்டிய - நிறைந்த. கேள்வி - கல்வி.

நுட்பமாக நூல்களை அறிந்து நிறைந்தகேள்வியையுடையவர் பிழையாக உணர்ந்தாலும் அறிவீனமான சொற்களைச் சொல்லார்.

418. கேட்பினுங் கேளாத்தகையவே கேள்வியாற் றோட்கப் படாத செவி.
அ

தோட்கப்படாத - துளைக்கப்படாத.

கேள்வியால் தொளைக்கப்படாத காது கேட்டாலும் கேளாத தன்மையையுடையதாகும்.

419. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய வாயின ராத லரிது.
சு

நுணங்கிய - நுட்பமாகிய.

நுட்பமான கேள்வியையுடையவரல்லாதவர் வணக்கமுடையவாயுள்ளவராயிருக்கிறது அரிது.

420. செவியிற் சுவை யுணரா வாயுணர்வின்மாக்க
ளவியினும் வாழினு மென் .
ம

அவியினும் - இறந்தாலும்.
காதுகளால் அறியப்படும் ருசியையுணராமல் வாயால் உண்ணப்படும் ருசியை (மாத்திரம்) அறியும் மனிதர் இறந்தாலும் வாழ்ந்தாலும் என்ன.



. 2ம பொருட்பால்."
## 43. அறிவுடைமை.

421. அறிவற்றங் காக்குங்கருவி செறுவார்க்கு
முளளழிகக லாகா வரண்.
க

அற்றம் - முடிவு. கருவி - ஆயுதம்.
அறிவு முடிவுவராமல் காக்குங்கருவியாம்; அது சத்துரா திகளாலும அழிககலாகாத உள்ளான அரணுகும்.

422. சென்றவிடத்தாற் செலவிடா தீதொரீ இ
நன்றின்பா லுய்ப்ப தறிவு .
உ

(ஒரீஇ, ஒருவி). உய்பபது - செலுத்துவது.
மனதைச்செனற விஷயததில் செல்லவிடாமல்

கெட்ட வைகளை நீகுகி நலலதினிடத்தில செலுத்துவது அறிவாம்.

423. எப்பொருள் யார்யார்வாய்க்கேட்பினுமப்பொரு ண்

மெய்ப்பொருள் காண்ப தறிவு.

க

எந்தபபொருளை யாராவராயால் கேட்டாலும் அபபொ ருளினது மெயப்பொருளைக்காண்பது அறிவாகும்.

424. எண்பொருளவாகச் செலசசொல்லித் றுண்பொருள் காண்ப தறிவு.

தான்பிறர் [வாய் சு

எண - எளிய. பொருளவாக - பொருளையுடையன வாக.

தெளிவான பொருளையுடையனவாக மனதிற் படிசொலலித தான மற்றவர்வாயினின்று பிறக்கும

செலலும நுட்பமா கியபொருளைக்காண்பது அறிவாம.

425 உலகநதழீஇய தொட்ப மலர்தலுங் கூமபலு மிலல தறிவு.

ரு

சழீஇயது (தழுவியது) - நட்பாக்குவது.
அறிவுடைமை. மலர்தல - விரிதல். கூம்பல் -

ஒட்பம்-
குவிதல்.

உயாநதோரைச சிநேகிபபது அறிவுடைமை;
குவிதலுமிலலாதது அறிவாம.

விரிதலுங்

பொருட்பால். கக

426. எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு.

கு

எவ்வது - எது. உறைவது - நடப்பது.
உலகம் எப்படிநடக்கிறதோ அப்படி உலகத்தோடு
பதே அறிவாம்.

நட ப் 427. அறிவுடையாராவ தறிவா ரறிவிலா
ரஃதறி கல்லா தவர்.

எ

வருவதை யறிபவர் அறிவுடையவர், வருவதை அறிய
ப்படியாதவர் அறிவில்லாதவர்.

428. அஞ்சுவதஞ்சாமை பேதமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்.

அ

பயப்படவேண்டியதற்குப் பயப்படாமை பேதமையாம். பயப்படவேண்டியதற்கு பயப்படல் அறிவுடையவர் தொழிலாம்.

429. எதிரதாக்காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய்.

ஈ

(தங்களுக்கு
அறிவுடையவர்க்கு

வருவதை) முன்னேயறிந்து காக்கவல்ல
அதிரும்படிவரும் ஒரு துன்பமுமில்லை. 430.

அறிவுடையா ரெல்லாமுடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்.

ய

அறிவுடையவர்யாவையுமுடையவர், அறிவில்லாதவர் எல்லாமுடையவராகிலும் ஒன்றுமில்லாதவர்.



பொருட்பால்.

## 44. குற்றங்கடிதல்.

431. செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

க

செருக்கு - அகங்காரம். பெருமிதம் - மேம்பாடு.
அகங்காரமுங் கோபமுங் காமமும்
இல்லாதவர்களின் செல்வம் மேம்பாடுடையது.

432. இவறலு மாண்பிறந்த மானமு மாணு
வுவகையு மேத மிறைக்கு.

உ

இவறல் - லோபித்தனம். இறந்த - நீங்கிய. உவகை- மகிழ்ச்சி. ஏதம் - குற்றம்.

லோபித்தனமும் நன்மையினீங்கிய மானமும் மாட்சிமையில்லாத மகிழ்ச்சியும் அரசனுக்குக் குற்றங்களாம்.

433 .

தினைத்துணையாங் குற்றம்வரினும் பனைத்துணை
கொள்வர் பழிநாணுவார். [யாக் ரு

பழிக்கு அஞ்சுகிறவர்கள் தினையளவு குற்றம்வந்தாலும் அதைப் பனையளவாக எண்ணிக்கொள்ளுவார்கள்.

434. குற்றமேகாக்க பொருளாகக் குற்றமே
யற்றந் தரூஉம் பகை.

அற்றம் - அழிவு.

குற்றமே அழிவைத்தரும்பகையாம். ஆதலால் வராமையைப் பொருளாகக் காக்கக்கடவன்.

குற்றம்

435. வருமுன்னர்க் காவாதான்வாழ்க்கை கயெரி
முன்னர்
வைத்தூறு போலக் கெடும்.
ரு

வை - வைக்கோல். தூறு - போர்.
(குற்றம்) வரும்முன் தன்னைக் காத்துக்கொள்ளாதவனின் வாழ்க்கை நெருப்பின்முன் வைக்கோலின் போர்போல் கெடும்.

பொருட்பால். கரு

436. தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி
னென்குற்ற மாகு மிறைகரு.
சு

தன குற்றதகை நீக்கிப்பிறர் குற்றதகைக்கண்டால் அரசனுககு எனதககுற்றமுண்டாகும.

437. செயற்பால செய்யா திவறியான் செலவ
முயற்பால தன்றிக கெடும.
எ

இவறியான் - லோபி. உயல - உள்ளது.
செட யபபடுந தனமையையுடையவைகளைச செயயாமல் லோபிததனஞ் செயதவனின செல்வம் யினறிககெடும.

விாதநியாகுநதனமை

438.

பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு
மெண்ணைப்படுவ தொன் றன்று. அ

இவறனமை - லோபிததனம. எறறுள்ளும் - எலலாக
குறறஙகளுளளும.

(பொருளைப்) பறறுகிற உளளமெனனும் லோபிததனம எல்லாககுறறங்களுள்ளும (வைதது) நினைககப்படும்படியான ஒனறலல.

439 வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

கூ

வியவற்க - மதியாதிருககக. நயவறக - விரும் பா திரு க க.

ஒருவன் எநதக்காலததிலுந தன்னைமதியாமலிருப்பானாக; நனமையைககொடாத செயகையை விருமபாதிருப்பானாக.

440. காதல காதலறியாமை யுய்க்கிற்பி
னேதில வேதிலா நூல.

ம

காதல - வேண்டியவைகள. உயக்கில் - அநுபவித
தால. ஏதில - பயனறற. ஏதிலா - சத்துருககள
நூல் - எண்ணம.

தனக்கு வேண்டிய வைகளைப் பிறர் அறியாமல் நடப்பித்தால் சததுருக்கள் எணணம் பயனற்றதாகும்.





பொருட்பால.

## 45. பெரியாரைத் துணைக்கோடல்

441. அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்.

௧

தேர்ந்து - தெரிந்து.

தர்மவழிகளையறிந்து முதிர்ந்த அறிவுடையவர் சி
நேகத்தை (அரசன்) சமயமறிந்து தெரி
ந்துகொள்ளக்கடவான்.

442. உற்றநோய் நீக்கி யுறா அமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

௨

உறாமை - வராமல். பெற்றியார் -
யவர்.
தன்மையையுடை

வந்ததுன்பங்களை நீக்கி (அப்படிப்பட்டவை)
வராதப டிக்குமுன்னமே காத்துக்கொள்ளுந்
(அரசன்) சினேகிக்கக்கடவான்.

தன்மையையுடையவரை 443. அரியவற்று
ளெல்லாமரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

௩

தமர் - உரியவர்.

பெரியவர்களை ஆதரித்துத் தமக்குரியவராகக்
தல் அரியவைகளிலெல்லாம் அரிதாம்.

கொள்ளு

444. தம்மிற்பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

ச

தம்மைப்பார்க்கிலும் பெரியவர்
தமக்குரியவராகும்படி நடத்தல் எல்லாவல்லமையிலும்
முதன்மையாம்.

445. சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

ரு

சூழ்வார் - மந்திரிகள். சூழ்ந்து - ஆராய்ந்து.
அரசன் மந்திரிகளைக்கண்ணாகக்
கொண்டுநடக்கிறபடியால் மந்திரிகளை ஆராய்ந்துபார்த்து
வைத்துக்கொள்ளக் கடவான்.

பெரியாருடபால். கூ

446. தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந் ததில்.

சா

இனத்தன் - சினேகிதன். செற்றார் - பகைவர்
யோக்கியரின் சினேகிதனாய் நடக்கவல்லவனைப்
பகைவர் செய்யக்கிடந்தது ஒன்றுமில்லை.

447. இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

எ

கண்டித்துப்புத்திசொல்லுந் துணையானவரை ஆளும் ரைககெடுக்குந் தகைமையையுடையவராார்.

அா
448. இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

அ

ஏமரா - காவலற்ற.

இடித்துப்புத்திசொல்லுவாரில்லாத காவலற்ற கெடுப்பவர்களிலலாதிருந்தாலுங் கெடுவான்.

அரசன் 449. முதலிலார்க் கூதியமில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை.

கூ

ஊதியம் இலாபம். மதலை - தாங்கல. உதவி.

சார்பு-

முதற்பொருள் இல்லாதவாகளுக்கு லாபமில்லை. துணையில்லாதவருக்கு நிலையுமில்லை.

தாங்குந
450. பல்லார்பகை கொளலிற் பத்தடுத்ததீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

ம

பல்லார் - பலர். தொடர் - நட்பு.

நல் லவரின் நட்பை விட்டுவிடுதல் பலரோடு பகைத்துக் கொள்வதிலும் பத்துபபங்கு தீமையையுடையதாம்.





## 46. சிற்றினஞ் சேராமை.

451. சிற்றினமஞ்சும்பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

க

பெரியோரியல்பு சிறிய இனத்திற்கு அஞ்சும். சிறியோரியல்பு அதைச் சுற்றமாக எண்ணிக்கொள்ளும்.

452. நிலத்தியல்பா னீர் திரிந்தற்றா குமாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.

உ

தண்ணீர் நிலத்தின் தன்மையால் வேறுபடுவதுபோல் மனிதருக்குண்டான அறிவு இனத்தன்மையால் வேறுபடும்.

453. மனததாறு மாந்தர்க் குணர்ச்சி யினத்தானு
மின்னு னெனப்ப டுஞ்சொல்.

ந

மனிதருக்கு அறிவு மனதினாலுண்டாகும்;

இவனிப்படிப்
பட்டவனென்று சொல்லப்படுஞ் சொல் இவன் கூட்டத்தா
லாகும்.

454. மனத்து ளது போலக் காட்டியொருவற்
கினத்துள தா கு மறிவு.

சு

அறிவுஒருவனுக்குமனதில் உள்ளதுபோலக்காட்டி அவன் சேர்ந்திருக்கும் இனத்தினிடத்திலுள்ளதாகும்.

455. மனந் தூய்மை செய்வினை தூய்மையிரண்டு
மி னந்தூய் மை தூவா வரும் .

ரு

தூவா - பற்றுக்கோடாக.

மனதின் தூய்மையுஞ் செய்தொழிலின் தூய்மையுமாகிய இரண்டும் இனத்தூய்மையின் பற்றுக்கோடாக வரும்.

பொருட்பால். கஙச

456. மனந்தூயாராகவெச்ச நன்றாகு மினந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

சா

மனத்தூய்மையுள்ளவர்களுக்கு மக்கள் பேறு நன்றாகும் இனத்தூய்மையுள்ளவர்களுக்கு நன்மையாகாத கருமமில்லை. 457. மனநல மன்னுயிர்க்காக்க மினநல
மெல்லாப் புகழுந்தரும்.

எ

மனதின் நன்மை மன்னுயிர்க்குச் செல்வந்தரும்;

இன நலஞ் சகல புகழ்ச்சியையுங் கொடுக்கும்.

158. மனநல நன்குடையராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து.

அ

நன்கு — நன்மை.

சான்றோர் மனநலத்தை நல்வினையால் உடையவராயிருந்தாலும் அவர்களுக்கு இன நலம் உறுதியுடையது.

459. மனநலத்தி னாகு மறுமைமற் றஃது
மினநலத்தி னேமாப் புடைத்து.

மனநலத்தால்மறுமை இன்பங்கிடைக்கும்; அதுவும் கூ நன்மையால் வலிமையுடையதாகும்.

இன

460.. நல்லினத்தி னூங்குந்
துணையில்லைதீயினத்தி
னல்லற் படுப்பது உ மில்.

ம

ஊங்கும் - மிகுதி.

நல்ல இனத்திற்குமேலான துணை இல்லை; கெட்டதைப் போல் துன்பப்படுத்துவதுமில்லை.

இனத்



KURAL. II.

கூது —ையா ருடையாய.

## 47. தெரிந்து செயலவகை.

461. அழிவதூஉம் வருவதூஉமாகி வழிபயக்கும்
ஊதியமுஞ் சூழ்ந்து செயல்.

க

சூழ்ந்து - ஆராய்ந்து.
(ஒருவன்) அழிவதையும் வருவதையும் ஆரம்பித்தப்பின்னுண்டாகும் லாபத்தையும் ஆராய்ந்து ஒருதொழிலைச் செய்யவேண்டும்.

462. தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில் [வார் ஈ

உ

தான்தெரிந்துகொண்ட இனத்தோடு ஆராய்ந்து (தா மும்) எண்ணிச்செய்பவர்க்கு அருமையான இல்லை.
பொருள்யாதொன்றும்

463. ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார்.

ந

ஊக்கார் - மேற்கொள்ளார்.
லாபத்தைக் கருதி முதலை இழக்குந்தொழிலை அறிவுடையார் மேற்கொள்ளார்.

464. தெளிவிலதனைத் தொடங்கா ரிளிவென்னும்
ஏதப்பா டஞ்சு பவர்.

ச

இளிவு -இழிவு. ஏதப்பாடு - குற்றம்.

இகழ்ச்சியென்னுங் குற்றத்திற்குப் பயப்படுகிறவர்கள் அனியப்படாத தொழிலைச்செய்யமாட்டார்கள்.

465. வகையறசசூழாதெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு.

௫

வகை - விதம். அற - முற்ற. பாத்திப்படுப்பது - பெறச்செய்வது.

நிலை

காரியத்தை முழுவதும் ஆராய்ந்துபாராமல் பகைவர் மேல் செல்லுதல் அவர்களை நிலைபெறச்செய்யும் ஓர் வழியாகும்.

மயாருடடபால. ௬௬

466. செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

௬

ஒருவன் செய்யத்தகாததைச்செய்தால்கெடுவான்; செய்யத்தக்கவைகளைச் செய்யாமையினாலுங் கெடுவான்.

467. எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
னெண்ணுவ மென்ப திழுக்கு.

௭

நினைத்து ஒரு தொழிலைச்செய்வாயாக; எண்ணுவோமென்பது குற்றமாகும்.

செய்தபின் பு

468. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர் நின்று
போற்றினும் பொத்துப் படும்.

அ

ஆற்றின் - வழியால். போற்றினும் - காத்தாலும்.

பொத்துப்படும் - குற்றப்படும்.

முடியும் உபாயம் அறிந்துவருந்தாத முயற்சி பலர் காத்தாலுங் குற்றப்படும்.

நின்று

469. நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

கூ

ஆற்றல் - செய்தல்.

அவரவருடைய குணங்களையறிந்துசெய்யாதபோது நல்ல உபாயத்தைச் செய்தலுள்ளுங் குற்றமுண்டு.

470. எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு.

ம

எள்ளல் - இகழ்தல்.

தமது நிலைமையோடு பொருந்தாத உபாயங்களை உலகம் அங்கிகரியாது; ஆதலால் இகழப்படாதவைகளை நினைத்துச் செய்யவேண்டும்.

## 48. வலியறிதல்:

471. வினைவலியுந் தன்வலியுமாற்ருன்வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல்.

௧

மாற்ருன் - எதிரி.

தொழிலின் வலிமையையுந தன்வலிமையையும்பகைவன் வலிமையை புந துணை நிற்பவரின வலிமையையும் ஆராயந்து பாாத்துச்செய்யக்கடவன்.

472. ஒல்வதறிவதறிந்த தன்கட் டங்கிச்
செல்வார்க்குச் செலலாதது இல்.

௨

ஒல்வது - கூடுவது. (கட்டங்கி - கண் தங்கி).

செய்ய க்கூடியதையும், அறியவேண்டியனவைகளையும் அறிந்து அதில் நிலைத்திருந்து (பகைவர்மேல) செலபவாககு முடியாதது ஒன்றுமில்லை.

473. உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர்.

௩

உடை - உரிய. ஊக்கம் - மன எழுச்சி. ஊக்கி - மேற்கொண்டு.

பலர் தங்கள் பலத்தை யறியாமல் ஊக்கத்தால் (யோா செய்யத) தொடங்கி மத்தியில் தோர்த்தார்.

474. அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் வி ரைந்து கெடும்.

அமைந்து - பொருந்தி. வியந்தான் - மெச்சினவன்.
மற்றவருக்குப்பொருந்தி நடவாதவனுந்தன்
வலிமையின் அளவை யறியாதவனுமாயிருந்து தன்னை
மெச்சிக்கொண்டவன விரைந்துகெடுவான்.

475. பீலிபெய்சாகாடு மச்சிறுமப் பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.

பீலி - மயிலிறகு. பெய் - ஏற்றின. சாகாடு -
இறும் - உடையும். சால - அதிகம்.

வண்டி
வும்

மயிலிறகை யேற்றின வணடியும் அப்பண்டத்தை மிக
அதிகபபடுத்தி ஏற்றினால் அச்சுமுறியும்.
பொருடபால். ாக

6. நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந்தூக்கி
னுயிர்க் கிறுதியாகி விடும்.

கொம்பர் - கொம்பு. இறந்து - கடந்து.
ஊக்கின் -
முயன்றால். இறுதி - முடிவு.
மரத்தின் நுனிக்கொம்பில் ஏறியிருக்கிறவன்
அதுகடந்து மேலே செல்லமுயன்றால் உயிர்க்கு
முடிவாகிவிடும்.

477. ஆற்றினளவறிந் தீக வதுபொருள்
போற்றிவழங்கு நெறி.

ன

(பொருள்வரும்) வழியின் அளவையறிந்து கொடுக்கக்க
டீவன்; அதுபொருளைக்காப்பாற்றி வழங்கும் வழியாகும்.

478. ஆகாறள விட்டிதாயினுங் கேடில்லைப்
போகா றகலாக் கடை.

அ

ஆகாறு - ஆகும்வழி. இட்டிதாயினும் -
யிருந்தாலும்.

கொஞ்சமா

போகும்வழி விரிவாகாததாகில் பொருள் வரும்வழி
வில் சிறிதாயிருந்தாலுங் கெடுதியில்லை.

அள

479. அளவறிந்து வாழா தான் வாழ்க்கை யுளபோல
வில்லாகித் தோன்றாக் கெடும்.

கூ

(பொருளின்) அளவையறிந்து வாழாதவனின்
வாழ்க்கை உள்ளதுபோலத்தோற்றி இல்லாததாகி அழியும்.

480. உளவரைத் தூக்காத வொப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்.

ம

உள - உள்ள. வரை - அளவை. தூக்காத -
ஆரா
யாத. ஒப்புரவாண்மை - உபகாரமுடைமை. வள
-

செல்வம். வல்லை - சீக்கிரம்.

தனக்குள்ள பொருள் அளவை ஆராய்ந்து பாராத உப
காரத்தன்மையால் அவன் செல்வத்தளவு சீக்கிரங் கெட்டுப்
போகும்.





## 49. காலமறிதல்.

481.
பகல்வெல்லுங்கூகையைக்காக்கையிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது.
க

இகல் - பகை.

பகலில் காக்கை கோட்டானை வெல்லும்;
(அதுபோல்) பகைவரைவெல்லக்கருதும்
அரசருக்குப்பொழுதுவேண்டும். 482.
பருவத்தோடொட்ட வொழுக றிருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.
உ

தீராமை - நீங்காமை. ஆர்க்கும் - கட்டும்.

காலத்தோடுபொருந்த நடத்தல் செல்வத்தை
கட்டுங் கயிறும்.
நீங்காமல்

483. அருவினையென்பவுளவோகருவியாற்
கால மறிந்து செயின்.

ங

அரு - அரிய.

தகுந்த கருவியைக்கொண்டு காலத்தையறிந்து செய்தால் அரியதொழில் என்பதுண்டா.

484. ஞாலங் கருதினுங் கைகூடுங்காலங்
கருதி யிடத்தாற் செயின்.

ஞாலம் - பூமி.

காலம் அறிந்து இடத்தோடுபொருந்தச் செய்தால் முழுவதையும் (பெற) நினைத்தாலுங் கைகூடும்.

பூமி

485. காலங் கருதியிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

இருப்பர் - இருப்பவர்.

பூமியை ஆள நினைத்திருப்பவர் காலத்தைத்தப்பாமல் கருதியிருப்பார்கள்.

பொருட்பால்.

486. ஊக்கமுடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

பொரு - சண்டைசெய்யும். தகர் - ஆட்டுக்கடா.

தாக்கல்-பாய்தல். பேரும் - பின்வாங்கும்.

தகைத்து-
தன்மையது.

வலிமையுடையவனின் பின்வாங்குதல்
சண்டைசெய்யும் ஆட்டுக்கடாபாயும்படிக்குப் பின்வாங்கும்
தன்மையையுடையதாம.

487. பொள்ளெனவாங்கே புறம்வேரார்காலம்பார்த்
உள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

எ

வேரார் - கோபியார். ஒள்ளியவர் - அறிவுடையவ
வாக

அறிவுடையவர் (பகைவர்) தீங்குசெய் ஈபொழுதே விரை
வெளியில் கோபியார். காலத்தைப்பார்த்து உள்ளே
கோபஞ் செய்வார்.

488. செறு நரைக்காணிற் சுமக்கவிறுவரை
காணிற் கிழக்காந் தலை.

அ

செறுநர் - பகைவர். சுமக்க - பணியக்கடவான்.

இறு

வரை - அழியுங் காலம். கிழக்காம் - கீழேவிழும்.
பகைவரைக்கண்டால் பணியக்கடவான். அவர்கள்
அழியுங் காலம்வந்தால் அவர்கள் தலைகீழே விழும். 489.
எய்தற்கரிய கியைந்தக்கா லந் நிலையே
செய்தற் கரிய செயல்.

சூ

எய்தல் - அடைதல். இயைந்த - கூடிய.
பெறுவதற்கு அரியவைகள் வந்து கூடினால்
வதற்கு அரியவற்றைச்செய்யக்கடவாய்.

உடனேசெய்

490. கொக்கொக்க கூம்பும் பருவத்து
மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

ம

கூம்பும் - அடங்கும். சீர்த்த - வாய்த்த.
அடங்குங் காலத்தில் கொக்குக்கு ஒத்திரு.
வாய்த்தபோது அதின் குத்தக்கு ஒத்திரு.

சமயம்



பொருட்பால.

## 50. இடனறிதல்.

491. தொடங்கற்கவெவ்வினையுமெள்ளற்கமுற்று
மிடங் கண்ட பின்னல் லது.

க

எள்ளற்க - இகழாதிருப்பாயாக.
முற்றும் இடத்தைக்கண்டபின் அல்லாமல் எந்தத்தொழிலையுந் தொடங்கா திருக்கக்கடவாய்; (பகைவர் சிறியவரென்று) இகழாதிருக்கக்கடவாய்.

492.
முரண்சேர்ந்தமொய்ம்பினவர்க்குமரண்சேர்ந்தா
மாக்கம் பலவுந் தரும்.

உ

முரண் - மாறுபாடு. மொய்ம்பு - பலம்.
மாறுபாட்டைச் சேர்ந்த
வலிமையையுடையவர்க்கும் அரணைச்சேர்ந்து ஆகும் ஆக்கம் பலவற்றையுந்தரும்.

493. ஆற்றருமாற்றி யடுபவிட னறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின்.

௩

ஆற்றார் - வலிமையற்றவர். அடுப - வெல்லுவார்கள்.

போற்றார்கண் - பகைவரிடத்தில்.

இடமறிந்து தம்மைக்காத்துக்கொண்டு பகைவரிடத்தில் யுத்தஞ் செய்தால் வலிமையில்லாதவரும் வலிமையுடையவராய் வெல்லுவார்கள்.

494. எண்ணியா ரெண்ண மிழப்பரிட னறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

௪

துன்னியார் - சென்றவர். துன்னி - சமீபித்து.

இடமறிந்து சென்றவர் (அரணை) பொருந்தி நின்று யுத்

தஞ் செய்தால் (அவரை வெல்ல) எண்ணியிருந்தவர் லெண்ணத்தை இழந்துபோவார்.

ஆவ்

495.

நெடும் புனலுள் வெல்லுமுதலையடும்புனலி
னீங்கி னதனைப் பிற. ௫

நெடும் - அதிக. புனல் - நீர். அடும் - கொல்லும்.

முதலை ஆழமான நீரில் வெல்லும்; நீரிலிருந்து பட்டால் அதைப் பிறவுயிர்கள் கொல்லும்.

வெளிப்

496. கடலோடா கால்வனெடுந்தேர் கடலோடு
நாவாயு மோடா நிலத்து.

௬

கால் - உருளை. வல் - பலமுள்ள. நாவாய் - கப்

பல.

பலமுள்ள உருளைகளையுடைய பெரியதேர் கடலில் ஓடாது; கடலில் ஓடும் மாக்கலம் நிலத்தில் ஓடாது.

497. அஞ்சாமையல்லாற்றுணை வேண்டாவெஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின்.

எஞ்சாமை - குறையாமை.

(செய்யுந் தொழில்களைக்) குறைவில்லாமல் எண்ணி இடமறிந்து செய்தால் பயப்படாமையை யன்றி வேண்டியதில்லை.

வேறுதவி

498. சிறுபடையான் செல்லிடஞ்சேரி னுறுபடையா
னூக்க மழிந்து விடும்.

உறுபடை - பெருஞ் சேனை.

சிறியசேனையையுடையவன் செல்லிடத்தைச் சேர்ந்தால் பெருஞ் சேனையையுடையவனின் ஊக்கம் அழிந்துபோகும்.

499. சிறை நலனுஞ் சீருமிலரெனினு மாந்த
ருறை நிலத்தோ டொட்ட லரிது.

சிறை - அரண். சீர் - வலிமை. உறை - தங்கும்.

ஒட்டல் - யுத்தஞ் செய்தல்.
கோட்டையின் நலமும் வலிமையும் இல்லாதவராயிருந்
தாலும் மனிதர் வாசஞ்செய்கிற இடத்தில் சென்று
ளோடு போர்புரிதல் அருமை.

அவர்க

500. காலாழ் களரினரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு.

ம

ஆழ் - புதையும். களர் - சேற்றுநிலம்.
கோத்த. களிறு - ஆண்யானை.

முகத்த

பாகனுக்குப் பயப்படாததும் வேலையுடைய ஆட்களைக்
கோத்த கொம்பையுடையதும் ஆகிய யானையைக் கால்புதை
யுஞ் சேற்று நிலத்தில் நரி கொல்லும்.

நாக யபாருட்பால்.

## 51. தெரிந்துதெளிதல்.

501. அறம் பொருளின்பமுயிரச்ச நான்கின்
றிற ந் தெரிந்து தேறப் படும்.

க

அறம், பொருள், இன்பம், உயிர்ப்பயமாகிய தன்மையை யறிந்து தெளியப்படுவான்.

நான்கின் 502.

குடிப்பிறந்து குற்றத்தினீங்கிவடுப்பரியு
நாணுடையான் கட்டே தெளிவு. ௨

வடு - குற்றம். பரியும் - அஞ்சும்.

(அரசன்) உயர்ந்த குடியிற்பிறந்து குற்றத்திலிருந்து நீங்கிப் பழுது வருமாவென்று அஞ்சி நிற்கும் நாணமுடையவனைத் தெரிந்துகொள்ளவேண்டியது.

503. அரிய கற்றுசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு.
௩

ஆசு - குற்றம். வெளிறு - அறியாமை.

அரிதான நூற்களைக் கற்றுக் குற்றங்களற்றவரிடத்திலும் ஆராயுங்கால் அறியாமையில்லாதிருக்கை அரிதாகும்.

504. குணநாடிக் குற்றமு நாடியவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல்.
௪

மிகை - அதிகம்.

குணங்களையுங் குற்றங்களையும் ஆராய்ந்து அவற்றுள் அதிகமானவைகளை ஆராய்ந்து மிகுந்தவைகளைக் கொள்ளக்கடவான.

505. பெருமைக்குமேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக்கல்.
௫

ஏனை - மற்ற. கட்டளைக்கல் - உரைக்கல்.

பெருமைக்கும மற்றச்சிறுமைக்குந் தங்கள்தங்கள்
மையே கூரைக்கல்லாம்.

செய் ~~யப்பாருடபாஸ்.~~

506. அற்றாரைத் தேறுதலோம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.

ஓமபுக - ஒழிவாறுக. பற்றிலர் - பற்றிலலாதவர்.
ஏரித்திரரைத் தெரிந்துகொள்ளுதலே
ஒழியக்கடவன்
அவர்கள பற்றில்லாதவராய்ப பழிககு அஞ்சார.

507. காதன்மை கந்தாவறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்.

காதனமை - அன்புடைமை. கந்து -
பற்றுக்கோடு.
அன்புடைமை பற்றுக்கோடாக
அறியவேண்டியவைகளை அறியாதவரைத
தெரிந்துகொள்ளல் அறிவினமையை யெலலாந தரும்.

508, தேரான் பிறனைத்தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்.

ஆராயாமல் பிறனைத தெரிநதுகொண்டவனின்
முறையிலும நீங்காத துன்பத்தைத் தரும்.

சந்ததி

509. தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபிற்
றேறுக தேறும் பொருள்.

௯

யாரையும் ஆராயாது தெரிந்துகொள்ளாதிருப்பானாக; ஆராய்ந்தபின் தெளியப்படும் பொருளைத்தெளியக்கடவான்.

510. தேரான்றெளிவுந் தெளிந்தான்கணையுறவுந்
தீரா விடும்பை தரும்.

௰

ஐயுறவு - சந்தேகம்.
ஆராயாமல் தெளிதலும் தெளிந்தவனிடத்தில் சந்தேகப்படுதலும நீங்காத துன்பத்தைத் தரும்.



பொருட்பால்.

## 52. தெரிந்துவினையாடல்.

511. நன்மையுந் தீமையுநாடி நலம்புரிந்த
தன் மையா னாளப் படும்.

௧

புரிந்த - விரும்பிய. தன்மையான் - தன்மையுள்ளவன்.

நன்மையையுந் தீமையையும் ஆராய்ந்துபாாதது நலத்தை விரும்பிய தன்மையையுடையவன ஆளப்படுவான.

512. வாரிபெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய் வான் செய்க வினை.

உ

வாரி-பொருள்வரும்வழி. வளம்-செல்வம். படுத்து-
பெருக்கி.

பொருள்வரும் வழியை விரிவாக்கிப்பொருளை விருத்தி
க கச்செய்து இடையூறுகளை ஆராய்பவன
தொழிலைச்செய்யக்கடவான.

518. அன்பறிவு தேற்றமவா வின்மையிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு.

ரு

அன்பு, அறிவு, கலங்காமை, ஆசையின்மை ஆகிய இந்த
நான்கையும நன்றுக உடையவனிடத்தில் (அரசனுக்குத்) தெ
ளிவுண்டாகும்.

514. எனைவகையாற்றேறியக் கண்ணும் வினைவகை
வேருகு மாந்தர் பலர். [யான்

ச

எனை - எல்லா.

எல்லாவகையிலுந தெளிந்தபினனும் தொழிலின் இய
ல்பால வேருகும் மனிதா பலர்.

515. அறிந்தாற்றிச்செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவர்பாற் றன்று.

செய்கிற்பாற்கு - செயபவனுக்கு.

தொழிலை பறிந்து பொறுத்துச்செய்யவல்லவனுக்கு
அல்லாமல் வேருெருவனுக்கு, இவன சிறந்தவனென்று
எண்ணி அ ற,தக்கொடுபபது தகுதியல்ல.

516. செய்வானை நாடி வினைநாடிக்காலத்தோ
டெய்தவுணர்ந்து செயல.

௬

எய்த - பொருந்த.

செய்கிறவனை ஆராய்ந்தூ காழிலேயும் ஆராய்ந்து காலத்தோடு பொருந்த உணர்ந்து செய்வாயாக.

517. இதனை யிதனாலிவன் முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடல்.

௭

ஆய்ந்து - ஆராய்ந்து.

இதை இவன இதினால் முடிப்பானென்று அதை அவனிடத்தில் விடவேண்டும்.

ஆராய்ந்து

518. வினைக்குரிமை நாடிய பின்றையவனை
யதற்கு ரிய னாகச் செயல்.

௮

உரிமை - உரியவன். பின்றை - பின்பு.

தன் தொழிலைச்செய்யும் ஒருவனின் தகுதியை ஆராய்ந்து அறிந்துகொண்டபின்பு அவனை அதற்கு உரியவனாகச்செய்யக்கடவான்.

519. வினைக்கண் வினையுடையான் கேண்மைவேறாக
நினைப்பானை நீங்குந் திரு.

௯

பட தன் தொழிலில் முயற்சியுடையவன் சிநேகத்தை நினைப்பவனை விட்டுச்செல்வம் நீங்கும்.

மாறு
520. நாடோறு நாடுக மன்னன்
வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.
ம

தொழிற் செய்பவன்
(ஆதலால) அரசன் அவன்

கோணுதிருக்க உலகங் கோணுது;
செய்வதை நாள்தோறும் ஆராயக்
கடவான.



## 53. சுற்றந்தழால்.

521. பற்றற்ற கண்ணும் பழமைபாராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.
க

செல்வமில்லாதகாலத்திலும்
பழைமையைக்கொண்டாடுதல் சுற்றத்தாரிடத்திலுண்டு.

522. விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும்.
உ

விருப்பு - அன்பு. அறு - நீங்காத.

இயையின் –
இசைதால. அருபபு – வளர்தல்.
(ஒருவனுக்கு) அன்பு நீங்காத சுற்றங்கிடைத்தால்
தல் குறையாத பலசெல்வங்களேயுந் தரும்.

கிளேத்

523. அளவளா வில்லாதான் வாழ்க்கை
கோடின்றி நீர் நிறைந் தற்று.

குளவளாக்

ந

அளவளாவு – கலப்பு. குளவளா –
குளப்பரப்பு.
கோடு – கரை.
சுற்றத்தோடு கலத்தல் இல்லாதவன் வாழ்க்கை
குளப் பரப்பு கரையின்றி நீர் நிறைந்தது போலாகும்.

524.
சுற்றத்தாற் சுற்றப் பட வொழுகல் செல்வந்தான்
பெற் றத்தாற் பெற்ற பயன்.

ஒருவன் செல்வத்தைப்பெற்றதினுல் உண்டாகும் பிர
யோசனம் என்னவெனுல் சுற்றத்தாரால்தான் சூழப்படும்
படி நடத்தலாம்.

525. கொடுத்தலு மின்சொல்லு மாற்றி னடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும்.

அடுக்கிய – நெருங்கிய.
ஒருவன் கொடுத்தலேயும் இனியசொல்லேயும் உ

டையவனுமிருந்தால அவன் தன்னெருங்கிய பந்துக்களால் சூழப்படுவான்.



526. பெருங்கொடையான் பேணான் வெகுளி
மருங்குடையார் மாநிலத் தில்.

யவனிய்

பேணான் - விரும்பாதவன். மருங்கு - சுற்றம்.
மிருந்த கொடையாளனுங் கோபத்தை
விரும்பாதவனுமிருந்தால் அவனைப்போல்
சுற்றமுடையவர் இந்தப்பெரிய உலகத்தில் இரார்கள்.

527. காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
மன்ன நீரார்க்கே யுள

கரவா - மறையாமல். கரைந்து - அழைத்து.
நீரார் - தன்மையையுடையவர்.
காக்கை மறைக்காமல் அழைத்துண்ணும்.
செல்வமும் அப்படிப்பட்ட தன்மையை யுடையவர்க்கு உண்டு. 528. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கி
னதுநோக்கி வாழ்வார் பலர்.

பொது - பொதுவாக. நோக்கான் - பாராதவன்.
அரசன் எல்லாரையும் ஒரே தன்மையாக நோக்காமல் அவரவர் தகுதிக்கேற்றபடி நோக்கினால் அதை
இறவர்கள் பலராவார்.
நோக்கி வாழு

529. தமராகித் தற்றுறந்தார் சுற்றமமராமைக்
காரண மின்றி வரும்.

அமாராமை - பொருந்தாமை.
(முன்னே) சுற்றத்தாராயிருந்து
தன்னைப்பிரிந்துபோன
வர் பொருந்தாமை காரணம் நீங்கினால் (திரும்பச்)
சுற்றத்தா
ராகுதல் உண்டாகும்.

530. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த
னிழைத்திருந் தெண்ணிக் கொளல்.

ம

உழை - இடம். இழைத்திருந்து - செய்துவைத்து.
தன்னிடத்திலிருந்து பிரிந்து ஒருகாரணத்தினால் வந்தவனுக்கு வேந்தன் (அக்காரியத்தை) செய்துவைத்து ஆராய்ந்து பார்த்து ஏற்றுக்கொள்ளக்கடவான்.



ளயக பொருட்பால்.

## 54. பொச்சாவாமை.

531. இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

இறந்த - அளவுகடந்த. உவகை — களிப்பு. சோர்வு
மறதி.

மிகுந்தகளிப்பின்மகிழ்ச்சியால் வரும்மறதி
கோபத்தைப் பார்க்கிலுந் தீமையாம்.

அளவுகடந்த

532. பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக் கொன் றாங்கு.

உ

பொச்சாப்பு - மறதி. நிச்ச - நித்திய.
நிரப்பு - தரித்திரம். ஆங்கு - போல்.

நித்திய வறுமை அறிவைக்கெடுப்பதுபோல் மறதி புகழைக்கெடுக்கும்.

533. பொச்சாப்பார்க்கில்லைப் புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு.

௩

புகழ்மை - புகழ்ச்சி. எப்பால் - எவ்வகை.

மறதியுடையவர்க்குப் புகழில்லை; அது உலகத்தில் எவ்வகை நூலுடையவர்க்குஞ் சம்மதமாம்.

534. அச்சமுடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

௪

நன்கு - செல்வம்.

பயமுடையவர்களுக்குக் கோட்டையில்லை; மறதியுள்ளவர்களுக்குச் செல்வமில்லை.

அதுபோல்

535. முன்னுறக்காவா திழுக்கியான் றன் பிழை
பின்னூ றிரங்கி விடும்.

௫

முன்னுற - முன்னமே. இழுக்கியான் - மறந்தவன்.
ஊறு - துன்பம். இரங்கிவிடும் - விசனப்படுவான்.

முன்னமே காவாமல் தவறினவன் துன்பத்தில் தன் பிழையைக்குறித்து விசனப்படுவான்.

536. இழுக்காமையார் மாட்டுமென்றும்
வாயி னதுவொப்ப தில்.

வழுக்காமை
சீ

இழுக்காமை - மறவாமை. வழுக்காமை -
வாயின் - வாய்க்குமானுல்.

தவறுமை.

மறவாமை யாரிடத்தும் எக்காலத்திலுந் தவறின்றி வாய்க்குமானுல் அதற்கு ஒப்பானதில்லை.

537. அரியவென் றுகாத வில்லைபொச் சாவாக்
க ருவியாற் போற்றிச் செயின்.

எ
போற்றி - எண்ணி.
மறவாமையாகிய கருவியால் எண்ணிச்செய்தால் அரிய வையென்று எண்ணப்பட்டு முடியாதவைகள் இல்லை.

538. புகழ்ந்தவைபோற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையு மில்.
அ
புகழ்ந்து சொல்லப்பட்டவைகளை மனவெழுச்சியோடு செய்யவேண்டும். அப்படிச்செய்யாமல் இகழ்ந்தவர்க்கு எழு பிறப்பிலும் (நன்மை) இல்லை.

539. இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

௯

மைந்து - மயக்கம்.
தங்கள் மகிழ்ச்சியில் செருக்கடையும்போது கெட்டவரை நினைக்கவேண்டும்.

மறதியால்

540. உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தா
னுள்ளிய துள்ளப் பெறின்.

௰

உள்ளியது - நினைத்தது. (மன், அசைநிலை.)
தான் நினைத்ததையெப்போதும் நினைக்க தான் நினைத்ததை அடைதல் எளிது.

வல்லவனுல்







## 55. செங்கோன்மை.

541. ஓர்ந்து கண்ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்து செய்வஃதே முறை. க

ஓர்ந்து - நாடி. கண்ணோடாது - முகங்கொடாமல்.

(குற்றத்தை) விசாரித்து முகங்கொடாமல் வரியை வாங்கி யாவரிடத்திலும் (குற்றத்திற்குத் தகுந்த தண்டனை யை) ஆராய்ந்துசெய்வதே (செங்கோல்) முறைமையாம்.

542. வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி. ௨

உலகமெல்லாம் மழையை நோக்கிவாழும். குடிகள் அரசனின் செங்கோலை நோக்கிவாழும்.

543. அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல். ௩

ஆதியாய் - ஆதாரமாய்.

அந்தணர் வேதத்திற்குந் தர்மத்திற்கும் ஆதாரமாய் நின்றது மன்னவன் செங்கோல்.

544. குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு. ௪

ஓச்சும் – செலுத்தும். தழீஇ (தழுவி) - அணைத்து.

குடிகளை அணைத்துச்செங்கோல் செலுத்தும் பெருநில மன்னனது அடியை உலகந் தழுவிக்கொண்டு நிற்கும்.

545. இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு. ரு

இயல்புளி - நீதியாய். நாட்ட - நாடுகளில். பெயல் - மழை. விளையுள் - விளைவு. தொக்கு - கூடி.

நீதியாய்ச் செங்கோல்செலுத்தும் மன்னவன் நாட்டில் மழையும் விளைவும உள்ளனவாகும்.



546. வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின்

கா

வேல் - ஆயுதம். கோடாது - கோணாது.

மன்னனுக்கு வெற்றியைத்தருவது வேலாயுதமல்ல, செங்கோலாம் அதுவுங் கோணுவிட்டால்.

547. இறைகாக்கும் வையகமெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச செயின்.

எ

இறை - அரசன். முறை - செங்கோல். முட்டா தப்பாமல்.

அரசன் பூமியெல்லாங் காப்பான். தப்பாமற் வாளுனல் செங்கோல அவனைக்காக்கும்.

செலுத்து

548. எண்பதத்தானோரா முறைசெய்யா மன்னவன்
றண்பதத்தாற் றானே கெடும்.

அ

எண் - எளிதான. பதத்தான் - சமயமுடையவன்.

ஓரா - ஆராய்ந்து. தண் - தாழ்ந்த.

எளியசமயமுடையவனுகி (அறிவிக்கப்பட்டதுகளை) ஆராய்ந்து உண்மைக்கு ஒபப நீதியைச் செய்யாத அரசன தாழ்ந்த பதவியில் நின்றுதானே கெடுவான.

549. குடிபுறங் காத்தோம்பிக்குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றெழில.

கா

குடிகளைப் பிறர்வருத்தாதபடிக்குக காத்துப் பராமரித்து (அவாகள்) குற்றங்களுக்காகத்தண்டித்தல் சன் தொழிலாம.

பழியல்ல, அர

550 . கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல்பைங்
கஊகட் டதனொடு நேர். [கூழ்
ம

ஒறுத்தல் - தண்டித்தல். பைங்கூழ் - இளம்பயிர்.
அரசன் கொடியவரைக் கொலையினால் தண்டித்தல்
வன்) இளம்பயிர்க்குக் களையெடுத்தலை ஒக்கும்.

(உழ



8



## 56. கொடுங்கோன்மை.

551.

கொலைமேற் கொண்டாரிற் கொடிதே யலைமேற்
டல்லவை செய்தொழுகும் வேந்து. [கொண் க

அலை — வருத்துதலை.
குடிகளைவருத்தப்படுத்தலை மேற்கொண்டு முறையற்ற
வைகளைச்செய்து நடக்கும் அரசன் கொலைபாதகரினுங் கொடி
யனுவான்.

552. வேலொடு நின்றானிடுவென் றது போலுங்
கோ லொடு நின்ற னிர வு.
உ

இரவு - பொருள்கேட்டல்.

அரசன் கொடுங் கோலோடு நின்று பொருள்கேட்குதல் வேலாயுதத்தோடு நிற்கிறவன் கொடுங்கள் என்று சொன்னது (வழிப்போக்கரைப்பார்த்து) போலாகும்.

553. நாடோறு நாடி முறைசெய்யா மன்னவ
னாடோறு நாடு கெடும்.

ந.

நாள்தோறுந (தீமைகளை) ஆராய்ந்து நீதிசெலுத்தாத அரசனின் நாடு நாள் தோறும் கெடும்.

554. கூழுங் குடியுமொருங் கிழக்குங்
சூழாது செய்யு மரசு.

கோல்கோடிச்

சூ

கூழ் - பொருள். ஒருங்கு - ஒருமிக்க. கோடி - தப்பி. எண்ணமல் முறைதபபி நடக்கும் அரசன் குடிகளையும ஒருமிக்க இழந்துபோவான்.

பொருளையுங்

555. அல்லற்பட்டாற்று தழுத கண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

இ

அல்லல் - துன்பம் படை - ஆயுதம். துன்பப்பட்டுப் பொறுக்கமாட்டாமல் அழுத

கண்ணீர் அரசன் செல்வத்தைத் தேய்க்கும் வாளாகும் அல்லவா. பொருட்பால: ருசு 5 5 6.

மன்னாகரு மன்னுதல் செங்கோன்மையஃதின்
மன்னுவா மன்னர்க் கொளி. [றேன்

மன்னுதல் - நிலைபெறுதல். இ ன் றேல் - யால்.

இல்லாமை

அரசர்க்கு நிலைபெறுதல் செங்கோலாகும். அது லாவிட்டால் அரசருக்குப் புகழ் உண்டாகாது.

இல்

557. துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளி யின்மை வாழு முயிர்க்கு.

எ

எற்று - எப்படி.

பூமிக்கு மழையில்லாமை எவ்வளவு துன்பந் தருமோ அவ்வளவு துன்பத்தை அரசனின் கிருபையில்லாமை தன் குடிகளுக்குத் தரும்.

558. இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற் கீழ்ப் படின்.

முறைமை செய்யாத அரசனின் கோலின் கீழ்
அ வறுமையிலும் துன்பத்தைத் தரும்.

வாழ்தல்

559. முறைகோடி மன்னவன்
செய்யி னுறைகோடி
யொல்லாது வானம் பெயல்.

சா

உறை - பருவமழை. கோடி - இல்லாமற்போக.
லாது - பொருந்ாது.

ஒல்
மற்

மன்னவன் முறை தப்பிப்போனல் பருவமழையில்லா
போக மேகம் பொழிதல் பொருந்தாது.

560. ஆபயன்
காவலன்

குன்று மறுதொழிலோர் நான்மறப்பர்
காவா னெனின். ம யர்

ஆ - பசு.
அரசன் காப்பாற்றுகில் பசுவின் பால் குறையும், வேதி
சாஸ்திரங்களை மறந்துவிடுவார்கள்.



பொருட்பால்.

## 57. வெருவந்த செய்யாமை.

561. தக்காங்கு நாடிக் தலைச் செல்லா
லொத்தாங் கொறுப்பது வேந்து.

வண்ணத்தா

தக்காங்கு - தக்கபடி. தலைச்செல்லா -
காமல். ஒறுப்பது - தண்டிப்பது.

விர்த்தியா (குற்றத்தை) தகுந்தபடி
பட்ட காரியம் நடவாதபடிக் க
டிப்பவனே அரசன்.
ஆராய்ந்து பின்னும் அப்படிப்
அக்குற்றத்திற்கு ஏற்ந்த தண் 562. கடிதோச்சிமெல்ல
வெறிக நெடிதாக்க
நீங்காமை வேண்டு பவர்.
உ.
ஓச்சி - செலுத்தி. எறிக - செய்யக்கடவார்.
செல்வம் நெடுங்காலம் நீங்காமலிருக்க
விரும்புகிறவர் (தண்டனை செய்வதில்)
அதிகக்கண்டிப்பாயிராமல் மெதுவாயிருக்கக்கடவர்.
563. வெருவந்த செய்தொழுகும் வெங்கோலனாயி
னொருவந்த மொல்லைக் கெடும்.

ந.
வெருவந்த - அச்சம். வெங்கோல் - கொடுங்கோல்.
ஒருவந்தம் - நிச்சயம். ஒல்லை - சீக்கிரம்.
பயப்படத்தக்க செய்கைகளைச் செய்து நடக்குங்கொடுங் கோலையுடையவனாயிருந்தால் நிச்சயமாகவே சீக்கிரத்தில் கெடுவான்.
564.

இறைகடியனென்றுரைக்குமின்னாச்சொல்வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும். ச

உறைகடுகி - ஆயுள்குறைந்து.

அரசன் கொடியவனென்று சொல்லப்பட்டு இனிமையில்லாத சொல்லையுடையவனாயிருந்தால் அவன் சீவநாட்கள் குறுகிச்சீக்கிரங்கெடும்.

565. அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்
பேஎய்கண் டன்ன துடைத்து. [வம் (5)

அரும் - அரிதான. செவ்வி - சமயம். (பேஎய் பேய்.)

அரிய சமயத்தையும் இனிமையில்லாத முகத்தையும் உடைய அரசனின் பெரிய செல்வம் பேய்கண்டசெல்வத்தைப்போலாகும்.



566. கடுஞ்சொல்லன் கண்ணிலனாயி னெடுஞ்செல்வ
நீடின்றி யாங்கே கெடும்.

௬

கடுஞ்சொல்லை யுடையவனுங் கண்ணோட்டமில்லாதவனுமானால் அவனது பெரிய செல்வம் நீடித்திராமல் அப்போதே கெடும்.

567. கடுமொழியுங் கையிகந்ததண்டமும் வேந்த
னடுமுரண் டேய்க்கு மரம்.

௭

கையிகந்த - அளவுகடந்த. அடும் - வெல்லும்.

முரண் - வலி என்னும் இரும்பு.

கடியசொல்லும் அளவுகடந்த தண்டனையும் அரசனின் பலம் என்னும் இரும்பைததேய்க்கும் அரமாகும்.

568. இனத்தாற்றியெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு.

அ

(காரியங்களை) இனத்தாராகிய மந்திரிகளைக்கொண்டு நடத்தி, தானும் எண்ணிச்செய்யாத அரசன் கோபத்தைச் செலுத்தி அவர்களைச் சீறினால் அவன் செல்வஞ் சுருங்கும்.

569. செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்.

செரு - போர். சிறை - அரண். வெரு - பயம்.

வெய்து - விரைவு.

யுத்தகாலத்தில் அரண்கட்டிக்கொள்ளாத அரசன்பயந்து விரைவில் கெடுவான்

570. கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோலதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.

பிணிக்கும் - கட்டும். பொறை - பாரம்.

கொடுங்கோலன் கல்லாதவரைத் தன்னிடத்தில் கூட்டிக்கொள்ளுவான். அதல்லாமல் பூமிக்குப் பாரமில்லை.



கண்ணோட்டம்.

## 58. கண்ணோட்டம்.

571. கண்ணோட்டமென்னுங் கழிபெருங் காரிகை

யுணமையா ஞுணடிவ வுலகு.

க

கண்ணோட்டம் - தாட்சிணியம். கழி - மிகவும்.

கா

ரிகை - அழகு.

தாட்சிணியமென்னும் மிகவும் பெரிய அழகு யிருப்பதால் இவ்வுலகு உண்டாயிருக்கிறது.

உண்டா

572. ணோட்டத்துள்ள துலகிய லஃதிலா ருண்மை நிலக்குப் பொறை.

உ

உலகநடை தாட்சிணியத்திலிருக்கிறது. அது இல்லாத வர் உளராதல் பூமிக்குப் பாரம்.

573. பண்ணென்னும் பாடற் கியைபின்றேற் கண்

கண்ணோட்டமில்லாத கண். [ணென்னும்

ந

பண் - இசை. இயைபு - இசைவு.

இசை பாடலுக்கு ஒத்துவராவிட்டால் என்னபயன். தயவு இல்லாதவிடத்தில் கண்ணால் என்னபயன்.

574. உளபோன் முகத்தெவன் செய்யுமளவினாற் கண்ணோட்ட மில்லாத கண்.

ச

(தரும்) அளவினால் கண்ணோட்டமில்லாதகண் முகத்தில் உள்ளவைபோல் தோற்றினாலும் என்னசெய்யும்.

575.

கண்ணிற் கணிகலங் கண்ணோட்டமஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும். ௫

அணிகலம் - ஆபரணம்.

தாட்சிணியம் கண்ணுக்கு ஆபரணம்; அதில்லாவிட்ட (கண்) புண்ணென்று நினைக்கப்படும்.

எல்

பொருட்பால்.

576. மண்ணோடியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர். ௬

அனையர் - ஒப்பானவர்.

கண்ணோடுபொருந்தியிருந்துந் தாட்சிணியமற்றவர் மண்ணோடு பொருந்தியிருக்கிற மரத்திற்கு ஒப்பாவார்.

577.

கண்ணோட்டமில்லவர் கண்ணிலர்கண்ணுடையார்
கண்ணோட்ட மின்மையு மில். ௭

தாட்சிணியமில்லாதவர் கண்ணற்றவர்;
கண்ணுள்ளவர் கண்ணோட்டமில்லாதவராதலுமில்லை.

578. கருமஞ்சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு.

அ

சிதையாமல் அழியாமல்.
(தமது) தொழில் கெடாமல் தாட்சிணிய ங்
காட்டவல்லவர்க்கு இவ்வுலகு சொந்தமாகும்.

579.

ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண்ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை. கூ

ஒறுத்து - துன்பப்படுத்தி.
தம்மை வருத்தப்படுத்துந்
தன்மையையுடையவரிடத்தி லுந் தாட்சிணியமுள்ளவராகிப்
மையே சிரேஷ்டம்.
பொறுத்துக்கொள்ளுந் தன்

580. பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

ω

பெய - இட. அமைவர் - பொருந்துவார்.
நாகரி
கம் - தயவு.
விரும்பப்படத்தக் க தாட்சிணியத்தை

வேண்டுகிறவர்கள் (இஷ்டர்) நஞ்சிடக்கண்டும் பொருந்தியிருப்பார்.

அதைச்சாப்பிட்டு அவர்களோடு





## 59. ஒற்றாடல்.

581. ஒற்று முரைசான்ற நூலுமிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண்.

க

ஒற்று - வேவுகாரன். உரை - புகழ். தெளிக்கடவான்.

தெற்றென்க -

அரசன் ஒற்றனும் புகழ்நிறைந்த நீதிநூலுமாகிய விரண்டையுந் தன் இருகண்களாகத் தெளியக்கடவான்.

இவ்

582. எல்லார்க்குமெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறித ல் வேந்த ன் றொழில் .

உ

நிகழ்பவை - நடப்பவை. வல் - விரைவில்.

எல்லாரிடத்திலும் நடப்பவைகளை எல்லாம் நாடோறுஞ் சீக்கிரமாய் அறிந்துகொள்ளல் அரசன்

தொழிலாம்.

583. ஒற்றினாலொற்றிப்பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில்.

ரு-

ஒற்றி - அறிந்து வரச்செய்து. கொற்றம் - வெற்றி.

ஒற்றனைக்கொண்டு (நடப்பவைகளை) அறிந்துவரச்செய்து (அவைகளால் வரும) காரியத்தை அடைவதே இல்லை.

ஆராயாத அரசன் வெற்றி

584. வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதாரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று .

சு

(தமமுடைய) காரியஞ் செய்பவர், சுற்றத்தார், வர் என்கிற எல்லாரையும் ஆராய்பவனே ஒற்றன்.

பகை

585. கடாஅவுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
முகா அமை வல்லதே யொற்று.

ரு

கடா சந்தேகிக்கப்படாத. உகாமை - தெரிவி யாமை.

சந்தேகிக்கப்படாத உருவத்தோடு (ஒருவனின்) கண்ணிற்குப பயப்படாது எங் காலத்திலும் மனதிலுள்ளவைகளை வெளியி— 'மல்ரு - ல்லவனே ஒற்றனும்.

586. துறந்தார் படிவத்தராகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று.

அ

படிவத்தர் - விரதவொழுக்கத்தார்.

துறந்தவர்களையும் விரதவொழுக்கத்தாரையும் போலாகி
உள்ளே நுழைந்து ஆராய்ந்து (அங்குள்ளோர்)
தாலுஞ் சோர்வில்லாதவனே ஒற்றனும்.

என்னசெய்

587. மறைந்தவை கேட்கவற்றாகியறிந்தவை
யையப்பாடில்லதே யொற்று.

ள

வற்றாகி - வல்லவனாகி.

மறைவானவைகளைக்கேட்கவல்லவனாயிருந்து
களில் சந்தேகமில்லாதவன் ஒற்றனுவான்.

அறிந்தவை 588.

ஒற்றொற்றித்தந்த பொருளையுமற்றுமோ
ரொற்றினுலொற்றிக்கொளல்.

அ

ஒற்றித்தந்த - அறிவித்த.

ஓரொற்றன் மறைவாயறிந்துவந்த காரியத்தையும்
(அரசன்) வேறொரு ஒற்றனுல் அறிந்துகொள்ளக்கடவான்.

589. ஒற்றொற் றுணராமை யாள்கவுடன் மூவர்
சொற்றொக்க தேறப் படும்.

சூ

தொக்க - ஒத்திருந்தால்.

(அரசன்) ஒரு ஒற்றன் மற்றொரு ஒற்றனையறியாதபடிக்கு ஆளக்கடவான். மூவருடைய சொற்களும் ஒத்திருந்தால் (மெய்யென்று) தெளியப்படும்.

590. சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை.

ம

(கட்; கண்). புறப்படுத்தான் - வெளிப்படுத்தினவன். மறை - இரகசியம்.

(அரசன்) ஒற்றனுக்குப்பிறர் அறியச்சிறப்புச் செய்யாதிருக்கக்கடவன். செய்தால் இரகசியங்களைத்தானே வெளிப்படுத்தினவனுவான்.





## 60. ஊக்கமுடைமை.

591. உடையரெனப்படுவ தூக்க மஃதில்லா
ருடைய துடையரோ மற்று.

க

உடையவரென்று சொல்லப்படுவது மனவெழுச்சியாம்; அதில்லாதவர் வேறுகாரியங்களை உடையவராயிருந்தாலும் உடையராகார்.

592. உள்ளமுடைமை யுடைமை
நில்லாது நீங்கி விடும்.

பொருளுடைமை

உ மை

மனவெழுச்சியுடைமை உடைமையாம். பொருளுடை
நிற்காமல் நீங்கிப்போகும்.

593. ஆக்கமிழந்தே மென் றல்லவா ருக்க
மொருவந்தங் கைத்துடை யார்.

க

அல்லவார் - மனம்வருந்தார். ஒருவந்தம் -
யாய். கைத்து - கைப்பொருள்.

உறுதி

நிலையுள்ளதா கிய
ஊ க்கத்தைக்கைப்பொருளாக உடைய வர் செல்வத்தை
இழந்துவிட்டோமென்று வருத்தப்படார்.

594. ஆக்கமதர் வினாய்ச்செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுழை.

அதர் - வழி. வினாய் - கேட்டுக்கொண்டு. உழை
இடம்.

அசைவில்லாத ஊக்கமுடையவனிடத்திற்குச்
செல்வம் வழியைக்கேட்டுக்கொண்டுபோகும்.

595. வெள்ளத்தனைய மலர் நீட்ட மாந்தர்தம்
முள்ளத் தனைய துயர்வு.

ரு

அனைய - அளவு.

மலரின் உயரஞ் சலத்தின் அளவாகும். மனிதர் அவர்கள் மனவெழுச்சியளவினதாம்.

உயர்வு

பொருட்பால். 

596. உள்ளுவ தெல்லாமுயர்வுள்ளன் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

௬

(அரசன்) நினைப்பதெல்லாம் உயர்வையே நினைக்கவேண் டும். அது ஊழ்வகையால் கூடாமற்போனாலும் தள்ளாமைக்குணமுடையதாம்.

597. சிதைவிடத் தொல்காருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு.

எ

சிதைவு - அழிவு. ஒல்கார் - தளரார். உரவோர் அறிவோர். பாடு - பெருமை.

யானை அம்புக்கட்டினால் (புண்) பட்டாலுந் தனது பெருமையை நிலைநிறுத்துவதுபோல் மனவெழுச்சியுடைய வர் அழிவுவந்தகாலத்திலுந் தளரார்.

598. உள்ளமிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு.

அ

உள்ளம் - மனவெழுச்சி. வள்ளி - ஆபரணம்.

செ
ருக்கு - மதிப்பு.

மனவெழுச்சியற்றவர் உலகத்தில் நாம்
ஆபரணமாயிருக்கிறோமென்னும மதிப்பையடையார்.

599. பரியது கூர்ங் கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

பரியது - பெரியது. கூர்ங்கோட்டது -
கூர்மையான
கொம்பையுடையது. வெரூவும் - பயப்படும்.
தாக்
குறின் - எதிர்ப்பட்டால்.
யானை பெரியதுங் கூர்மையான
கொம்பையுடையதுமானாலும் புலி எதிர்ப்பட்டால்
அதற்குப் பயப்படும்.

600. உரமொருவற்குள்ள வெறுக்கை யஃதில்லார்
மரமக்க ளாதலே வேறு.

ம
உரம் - ஞானம். வெறுக்கை - செல்வம்.
திட அறிவு ஒருவனுக்கு மனவெழுச்சியாம். அது
லாதவர் மரங்களாவார்; மனிதவடிவாயிருக்கைதான்
தியாசம்.
இல்
வித்



பொருட்பால்.

## 61. மடியின்மை.

601. குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னு
மாசூர மாய்ந்து கெடும்.

க

விளக்கம் - விளக்கு. மடி - சோம்பல்.

ஊா

நெருங்க. மாய்ந்து - மழுங்கி.

குடியாகிய குறைவற்ற விளக்கு சோம்பலென்னும் நெருங்கினால் மழுங்கிப்போகும்.

மாசு 602. மடியைமடியாவொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

உ

(மடியா: மடியாக.)

வர்

(தாம் பிறந்த) குடியை (நல்ல) குடியாக்க விரும்புப சோம்பலைச்சோம்பலாகவே நினைத்து நடக்கக்கடவர்.

603. மடிமடிக் கொண்டொழுகும் பேதைபிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து.

௩

மடி - கேடு. மடியும் - மடிந்துபோகும்.

கேட்டைத்தருஞ் சோம்பலைத் தனக்குள் கொண்டொழுகும் பேதையானவன் பிறந்தகுடி அவனுக்கு முந்திக்கெடும்.

.604.

குடிமடிந்து குற்றம் பெருகுமடி மடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு.

௪

மாண்ட - மாட்சிமைப்பட்ட. உஞற்று - முயற்சி.

சோம்பலில் விழுந்த மாட்சிமைப்பட்ட
முயற்சியில்லாதவர்க்குக் குடிக்கெட்டுக் குற்றம் பெருகும்.

605. நெடுநீர் மறவி மடிதுயி னான்குங்
கெடுநீரார் காமக் கலன்.

@

நெடுநீர் - தாமதம். மறவி - மறதி. துயில் -
கம். காமக்கலன் - விரும்பியேறுங் கப்பல்.

தூக் தாமதமும், மறதியும்,
நான்குங் கெட்டுப்போகுங்
யேறும் மரக்கலமாம்.

சோம்பலும், தூக்கமும் ஆகிய
தன்மையையுடையவர் விரும்பி

606. படியுடையா பற்றமைந்தக் கண்ணு
மடியுடை மாண்பய னெய்த லரிது.
[யார் கூ

படி - பூமி. பற்று - செல்வம்.
பூமியையுடையவர் செல்வம் வலிய வந்து
சேர்ந்தாலுஞ் சோம்பேறிகள் மாட்சிமையுள்ள
அடைவது அரிது.
பிரயோசனத்தை

607. இடிபுரிந்தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர்.

எ

இடிபுரிந்து - புத்திசொல்லி. எள்ளும் - இகழும்.
சோம்பலைவிரும்பி பெருமைபொருந்திய
முயற்சியற்றவர் கண்டித்துப் புத்திசொல்லி இகழுஞ்
சொல்லைக்கேட்பார்கள்.

608. மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் ஞென்னார்க்
சடிமை புகுத்தி விடும்.

அ

(குடிமைக்கட்டங்கிற்றன்: குடிமைக்கண், தன்.) ஒன்னார் - பகைவர்.

தங்கில், சோம்பல் குடிமையையுடையவனிடத்தில் அது அவனைப் பகைஞர்க்கு அடிமையாக்கிவிடும்.

தங்கின்ல்

609. குடியாண்மையுள்வந்த குற்றமொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும.

கூ

ஒருவன் சோம்பலையாளுந் தன்மையை ஒழித்தால் அவன் குடியின் ஆண்மையில் வந்த குற்றங் கெடும்.

610. மடியிலா மன்னவனெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு.

ம

றாஅயது (தாவியது) - கடந்தது.
சோம்பலற்ற அரசன் தன் அடியால் அளந்தகடவுள் தாவின எல்லாவுலகத்தையும் ஒருமிக்க அடைவான்.



## 62. ஆள்வினையுடைமை.

611. அருமையுடைத்தென் றசாவாமைவேண்டும்
பெருமை முயற்சி தரும்.

க

அசாவாமை - தளராதிருக்கை.

இது அருமையானதென்று (நினைத்து) வேண்டும். முயற்சி பெருமையைத்தரும்.

களாரவொருக்க

612. வினைக்கண் வினைகெட லோம்பல்வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு.

உ

ஓம்பல் - ஒழிக்கக்கடவன்.

தொழிலாகிய குறையைச்செய்யாது விட்டவரை உலகம் நீங்கிவிடும். ஆகலால் ஒருவன் தொழிலில் முயற்சியற் றிருப்பதை ஒழியக்கடவான்.

6 1 3 . தாளாண்மையென்னுந்
தகைமைக்கட்டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக் கு .

ங

தாளாண்மை - முயற்சி. வேளாண்மை - உபகார ம்.

உபகாரஞ் செய்தலென்னும் மேன்பாடு முயற்சி உயர்ந்த குணத்தினிடத்தில் தங்கியிருக்கிறது.

என்னும்

6 1 4 . தாளாண்மையில்லாதான் வேளாண்மைபேடிகை
வாளாண்மை போலக் கெடும்.
சு
முயற்சியில்லாதவ னின் உபகாரத்தன்மை பேடியின்கை யிலுள்ள வாளைப் போல் கெடும்.

6 1 5. இன்பம் விழையான் வினைவிழைவான்றன்கே ளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண்.
ரு
கேள் - பந்து.
இன்பத்தை விரும்பாமல் தொழிலை விரும்புகிறவன் தன் சுற்றத்தாரின் துன்பத்தை நீக்கி அவர்களைத் தாங்குந் தூணாவான்

பொருட்பால். ாஉக

616. முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை யின்மை புகுத்தி விடும்.

முயற்சி செலவத்தை வளர்க்கும்; முயற்சியின்மை
கா மையை அடைவித்து விடும்.

வறு
617. மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னுள்.
எ
மாமுகடி - மூதேவி. தாள் - முயற்சி.

சோம்பலினிடத்தில் மூதேவியிருப்பாள். ஸ்ரீதேவி சோம்பலற்றவன் முயற்சியினிடத்தில் ''''ாள என்பாகள்

618. பொறியின்மை யார்க்கும் பழியன்றறிவறிந் தாள்வினை யின்மை பழி.

அ

பொறி - விதி ஆள்வினை - முயற்சி.

(செல்வ தரும) விதியில்லாமை யாவர்க்கும் பழியல்ல அறியவேண்டியவைகளை யறிந்து முயற்சியில்லாமை பழியாகும்.

619. தெய்வத்தா னாகாதெனினு முயற்சிதன் மெய்வருத்தக் கூலி தரும்.

விதியால் ஆகாவிட்டாலும் முயற்சி தன் உடம்பு கூ திய வருத்தத்தின் அளவு கூலியைத் தரும்.

வருந்

620. ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித் தாழா துஞற்று பவர்.

ம

உப்பக்கம் - பின்பக்கம். உலைவு - இளைப்பு. உஞற்றுபவர் - முயல்பவர்.

உஞற் இளையாமல் தாழ்வற முயல்வோர் விதியையும் இருக்கக் காண்பார்கள்.

புறம்பே



## 63. இடுக்கணழியாமை.

621 இடுககண் வருஙகா னகுக வதனை
யடுததூரவ தஃதொபப தில

க

நகுக - மகிழ    அடுதது — மேலுமமேலும

ஊர

வது - நெருககுவது.

துனபம வருஙகாலததில மகிழநதிடவாய அதை மேலுமமேலும நெருககககூடியது அதறகு ஒபபானது இலலை.

622 வெளளத தனைய விடுமபை யறிவுடையா
னுளளததி னுளளக கெடும

உ

அனைய - ஒதத.

வெளளததை ஒததுனபம அறிவுடையார
நினைககக கெடும.
உளளததில

623 இடுமபைக கிடுமபை படுபப ரிடுமபைக
கிடுமபை படாஅ தவர

௩

படுபபர - உணடாககுவார.

துனபததிறகு வருததபபடாதவர துனபததிறகுத துனபததை உணடாககுவார.

எ

கையாறு - துன்பமாக. நிமல் - பெருமை.

உயர்ந்தவர் இந்த உடம்பு துன்பத்திற்கு இலக்கு என்று அறிந்து துன்பத்தைத் துன்பமாகக்கொள்ளமாட்டார்.

628. இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
றுன்ப முறுத லிலன்.

அ

உறுதல் - அடைதல்.

இன்பமடைதலே விரும்பாமல் துன்பப்படுதலே இயற்கையென்று தெளிந்திருப்பவன் துன்பமடையான்.

629. இன்பத்துளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன்.

கூ

இன்பத்தில் இன்பத்தை விரும்பாதவன் துன்பத்தில் துன்பமடையான்.

630. இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந் தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு.

ம

இன்னாமை - தீமை. விழையும் - விரும்பும்.

தன்

ஒருவன் துன்பத்தை இன்பமென்று கொள்ளுவானானால் பகைஞர் விரும்புஞ் சிறப்புண்டாகும்



# 64. அமைச்சு

631. கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு.

க

கருவி – சாதனம். அமைச்சு – மந்திரித்தனம்.
(பொருளுஞ் சேனையும் ஆகிய) சாதனங்களும்,
மும், செய்கையும், செய்யபபடும் அரிய தொழில்களும்
ருந்தியவன் மந்திரி.

கால
பொ

632. வன்கண் குடிகாத்தல் கற்றறிதலாள் வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.

உ

வன்கண் – அசைவின்மை. ஆள்வினை – முயற்சி.
அசைவின்கம, குடியைக்காத்தல், கற்றறிதல், முயற்சி
யோடு மேலே சொன்ன ஐந்தையும் உடையவனே மந்திரி.

633. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

ங

பிரிக்கவும், காத்துக்கொள்ளவும்,
பிரிந்தவரைப்பொருந்தச் செய்யவும் வல்லவனே மந்திரி.

ம

634. தெரிதலுந் தேர்ந்து செயலுமொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

ச

தலையா - உறுதியாக.

ஆராய்தலும், நாடிச்செய்தலும், உறுதியாகச் சொல்லலும் வல்லவனே மந்திரி.

635. அறனறிந் தான்றமைந்தசொல்லானெஞ் ஞான்றுந்
திறனறிந் தான் றேர்ச்சி துணை.

௫

ஆன்று - நிறைந்து. தேர்ச்சி - ஆலோசனை.

தர்மங்களை யறிந்து நிறைந்தமைந்த சொல்லையுடையவனாகி எந்நாளிலுந் தொழில் செய்யுந் திறங்களை யறிந்தவன் ஆலோசனைக்குத் துணையாவான்.



636. மதிநுட்ப நூலோ டுடையார்க் கதி நுட்பம்
யாவுள முன்னிற் பவை.

௬

நுட்பம் - நுண்மை.

இயற்கையான புத்தி நுட்பத்தை நூல் அறிவோடு உடையவர்க்கு அதிநுட்பமான எந்த ஆலோசனை முன்நிற்கும்.

637. செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல்.

௭

கடைத்தும் - காலத்திலும்.

ஒரு தொழிலைச்செய்யுந் திறத்தை உலக நடையையறிந்து செய்யவேண்டும்.

யதிர்திருந்தாலும்

638. அறிகொன் றறியா னெனினு

முறுதி

யுழையிருந்தான் கூறல் கடன்.

அ

அறி - அறிவை. உழை - பக்கம்.

(அரசன்) அறிவைத்தள்ளி அறியாதவனாயிருந்தாலும் உறுதியானவைகளைச் சொல்லல் மந்திரி கடமை.

639.

பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ ரெழுபது கோடி யுறும். கூ

தெவ் - பகைஞன்.

(அரசனுக்கு) பக்கத்திலிருந்து பழுது நினைக்கும் ரிக்குள் எழுபது கோடிபகைவர் இருப்பார்கள்

மந்தி

640. முறைப்படச் சூழ்ந்துமுடிவிலவே திறப்பாடி லா அதவர்.

செய்வர்

ம

செய்யுந் திறமையில்லாதவர் தகுந்தபடி ஆலோசித்தும் முடிவில்லாமலே செய்வார்கள்.





## 65 சொல்வன்மை.

641. நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று.

௧

நாவின் நலமென்று சொல்லப்படும் நன்மை ஆக்கமாகும்; அந்நலம் மற்ற நலங்கள் எல்லாவற்றிலும் மிகுந்தது. 642. ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

௨

ஆக்கமுங் கேடும் அதனால் வருதலால் அவன் சொல்லினிடத்தில் சோர்வு வராமல் காக்கக்கடவன்.

643. கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க்
வேட்ப மொழிவதாஞ் சொல்

கேளாரும்

௩

பிணிக்கும் - கட்டும். வேட்ப - விரும்ப.
கேட்டவர்களைக் கட்டுந் தன்மையையுடையவைகளாகிக் கேளாதவரும் விரும்பும்படி சொல்வதே சொல். 644. திறனறிந்து சொல்லுக
சொல்லை யறனும
பொருளு மதனினூஉங் கில்.

௪

சொல்லை (க்கேட்பார்) திறனறிந்து

